புரட்சிக் கவிஞர்—பாவேந்தர்

# பாரதிதாசன்

# பாடுகிறார்

திராவிட நாட்டுவீர் உங்கள் செயற்கெலாம்
அறமே அடிப்படை ஆதல் வேண்டும்
அறம் எனல் வள்ளுவர் அருளிய திருக்குறள்

செல்லும் வழிக்குத் திருக்குறள் விளக்கு!
மனமா சறுக்கும் இனிய மருந்து
கசடறக் கற்க; கற்றிலார் அறிஞர்பால்
கேட்க! கேட்க! திராவிடம் மீட்க

ஔவையார் அருளிய ஆத்திச் சூடியில்
ஒரு தொடர்தன்னை — ஒன்றுக்கான
உரையை — எப்படி ஒருவர் இலேசாய்
நினைவில் நிறுத்தி இனிதுரைப்பாரோ
அப்படித் திருக்குறள் முனிசாமி அறிஞர்
முப்பால் ஆயிரத்து முன்னூற்று முப்பது
குறளையும் அவற்றிற்குக் கொடுத்த பொருளையும்
நினைவில் நிறுத்தி இனிது விளக்கும் ஓர்
ஆற்றல் உடையவர்; அவர் திருக்குறள் மலர்
வழங்கும் நகைச்சுவை மறச்சுவை பிறசுவை
ஆர்ந்தசொல் அனைத்தும் பெரும்பயன் அளிப்பவை

அரிசிமா இட்டலி அளிப்பதாய்ச் சொல்லிப்
பாசிப்பயற்றுமி படைப்பார் அல்லர்;
அறிஞரின் பேச்சும் எழுத்தும் அருங்குறள்
தேன்ஆற்றி னின்று செம்பில்மொண் டளிப்பவை

குறட்பயன் கொள்ள நம்திருக்
குறள்முனி சாமிசொல் கொள்வது போதுமே!



புதுவை தந்த
புரட்சிக் கவிஞர்
பாவேந்தர் பாரதிதாசன்

திருக்குறள்

# காமத்துப்பால்

## வினாவிடை நுணுக்கமும் - விளக்கமும்


ஆசிரியர் :

தமிழ்மறைக்காவலர், கலைமாமணி

திருக்குறளார் வீ. முனிசாமி



திருக்குறளார் வெளியீடு

D. 4, டர்ன் புல்ஸ் சாலை,

நந்தனம், சென்னை - 600 035.

திருக்குறளார் வீ. முனிசாமி

D. 4, டர்ன் புல்ஸ் சாலை,
நந்தனம், சென்னை-600 035.

# திருக்குறளுக்குத் தொண்டு....

அன்புடையீர், வணக்கம்!

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்பது மகாகவி பாரதியாரின் வாக்கு. இளமையில் இந்தப் பாடலைப் படித்த எனக்கு உறுதியான எண்ணம் உள்ளத்தில் பிறந்தது.

1935ஆம் ஆண்டில் பேசும் ஆற்றலினை வளர்த்துக் கொள்ளும் பணியைத் தொடங்கினேன். அந்தப் பருவத்திலேயே ஆயிரத்து முன்னூற்று முப்பது குறட்பாக்களையும் மனனஞ்செய்து நல்லாசிரியரிடம் உரை நயம் கற்றுத் தெளிந்தேன்.

பொதுமக்களிடையே அவர்களுக்குப் புரியும் வகையில் எளிமையாக நகைச்சுவையுடன் குறட்பாக்களை விளக்கிக் கூறும் பணியினைத் தொடர்ந்து செய்துவந்தேன்.

அந்தக் காலத்தில் பொதுமக்களிடையே அவர்களுக்கு ஏற்றவாறு குறட்பாக்களைச் சொல்லுகின்ற பணியினை யாரும் செய்ய முயற்சிக்கவில்லை என்று கூறுவது மிகையாகாது.

திருக்குறள் சொற்பொழிவுகளைத் தொடங்கி பத் தாண்டுகள் கழித்து சிறுசிறு நூல்களாக எழுதி வெளியிட்டேன். எண்ணிக்கையில் இருபதுக்கு மேற்பட்ட நூல்கள்

வெளியிடப்பட்டன. அந்தக் காலத்தில் தமிழ் மாநாடுகள் தொடர்ந்து நடைபெற்றுவந்தன. சிறுசிறு நூல்களாகிய என்னுடைய நூல்கள் மக்களிடையே விரைவாகவும் எளிமையாகவும் பரவுவதற்கு வசதியாக விருந்தன.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு எழுதி வெளியிடப்பட்ட சிறுசிறு நூல்களின் தொகுப்புகளை நண்பர்களின் விருப்பப் படி இப்போது வெளியிடுகிறேன். அவைகளில் ஒன்றுதான் இந்த நூலும் ஆகும்.

1935ஆம் ஆண்டில் தொடங்கிய திருக்குறள் பரப்பும் பணியானது அடியேனல் விரைவாகச் செய்யப்பட்டு மக்க ளிடையே திருக்குறள் பற்றினை வேரூன்றச் செய்தது. திருக் குறள் விழிப்புணர்ச்சி விரைந்து வளர அடியேன் வித்திட் டேன் என்று பணிவோடு சொல்வதில் பெருமையடை கின்றேன்.

இதன் காரணமாகத்தான் தமிழ்ப்புலமை பெற்ற சான்ருேர்கள், பேராசிரியர்கள் எல்லாம் திருக்குறள் சம்பந்தமான நூல்களை எழுதி வெளியிட ஆரம்பித்தார்கள். ஆதலால்தான் திருக்குறள் சம்பந்தமாக வெளியிடப்பட்ட பேரறிஞர்களின் நூல்களெல்லாம் பெரும்பாலும் இந்த நாற்பதாண்டுகளுக்குள்ளாகவே இருக்கும் என்பதனைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

திருக்குறள் பரப்பும் பணியினைக் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாகத் தொடங்கி பெரும்பணி ஆற்றுவ தற்குப் பெருந்துணையாக இருந்த நகரம் திருச்சிமாநகர மாகும். திருச்சியில் 1948ஆம் ஆண்டு முதல் 1952 வரை (அதாவது டில்லி நாடாளுமன்றத்திற்கு நான் உறுப்பின ஞகச் சென்ற ஆண்டு 1952) 'குறள் மலர்' என்ற வார இத ழினைத் திருக்குறள் தொண்டிற்காகவே நடத்திவந்தேன். இந்த இதழ் மிக விரைவாகவும் பலத்த ஆதரவுடனும் தமிழர்களிடையே வளர்ந்துவந்தது. பிறகு கடலூரில்

திருக்குறள் அச்சகம் அமைத்து சிறுசிறு நூல்கள் பற்பல வெளியிட்டு வந்தேன்.

'குறள் மலர்' என்ற வார இதழும், அந்தக் காலத்தில் வெளியிடப்பட்ட சிறுசிறு நூல்களும், அடியேன் தொடர்ந்து செய்துவந்த திருக்குறள் சொற்பொழிவுகளுமே இன்றைய தினம் மக்களிடையே திருக்குறள் மணம் கமழ்வதற்கு முதற் காரணமாக விருந்தவைகளாகும் என்று அடக்கமாகச் சொல்லிக்கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

சற்றேறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன்பதாக வெளியிடப்பட்ட நூல்கள் அனைத்தையும் இப்பொழுது தொகுத்து பல நூல்களாக வெளியிடுகின்றேன்.

தமிழர்கள் நல்லாதரவினை நல்கி உலகப் பொதுமறைத் தொண்டினை ஊக்குவிக்குமாறு வேண்டுகிறேன்.

என்னுடைய அருமை நண்பரும், அகஸ்தியர் அச்சகத்தின் உரிமையாளரும், இந்த நூலினைச் சிறப்பாக அமையச் செய்தவரும், இந்த நூலுக்கு வாழ்த்துரையான சிறப்புரை தந்தவருமான தமிழ்ப்பேரறிஞர் **'சங்க இலக்கியச் செம்மல்'** உயர்திரு. க. சண்முகசுந்தரனார் அவர்களுக்கு உளமார்ந்த நன்றியினையும் வணக்கத்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்

**நூலாசிரியன்**

க. சண்முகசுந்தரம்

97, பஜனை கோயில் தெரு,
சூளைமேடு, சென்னை-600 094.

# திருக்குறளாரைப் பற்றிய சில வார்த்தைகள்

திருக்குறளார் தமக்குவமையில்லாததொரு தமிழறிஞர். ஒருவர் மேடைப்பேச்சாளர்களைப் போலவே அவர்களுடைய குரலிலேயே பேசிவிடலாம். ஆனால் திருக்குறளாரைப் போல் கதைச் சொல்லி முகபாவத்தைக் காட்டி அவையோரைக் குலுங்ககுலுங்கச் சிரிக்கவைக்க எந்த நகைச்சுவை நடிகராலும் முடியாது என்பது மிகையாகாது.

திருக்குறளார் ஒரு குறட்பாவில் உள்ள அருஞ்சொற்களைத் திருவள்ளுவர் எந்தெந்த குறட்பாவில் கூறியுள்ளார் என்பதை எடுத்துக்கூறிப் பொருள் விளக்கம் தரும் ஆற்றல் மற்றவரிடம் காண்பதரிது.

திருக்குறளார் தமக்கே யுரிய பாணியில் இந்நூலை இயற்றியுள்ளார். முதற்கண் காமத்துப்பாலின் ஒவ்வொரு பாவுக்கும் வினாக்களைக் கூறியுள்ளார். அவ்வினாக்களிலேயே விடைகளும் அடங்கியுள்ளன.

பிறகு ஒவ்வொரு குறட்பாவையும் கூறி அதற்குரிய வினாக்களுக்கு விடையாக விளக்கவுரை கூறியுள்ளார்.

அப்பால் தலைவன் தலைவியைக் குறித்துச் சொன்ன சொற்களையும், தலைவி தலைவனைக் குறித்துச் சொன்ன சொற்களையும் பட்டியல் போட்டுத் தந்துள்ளார். இவைகளை மனப்பாடஞ் செய்துவிட்டால் சங்கப் புலவர்கள் பாடிய அகப் பாக்களைப் படிப்பது எளிமையாகிவிடும். ஏனென்றால் திருவள்ளுவர் தலைவனையும் தலைவியையும் குறித்துச் சொன்ன சொற்களையும் கருத்துக்களையும் சங் ப் புலவர்களும் கூறியுள்ளார்கள்.

இறையனார் அகப்பொருள் இலக்கணத்தில் காண்பது போலவே திருக்குறளில் களவியல், கற்பியல் என்ற இரண்டு இயல்களைக் காண்கிறோம்.

அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்
அதுவே
தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்

—இறையனார் அகப்பொருள்
இலக்கணம் சூத்திரம் 1-2.

தலைவனும் தலைவியும் தனியிடத்தில் ஒருவரையொருவர் கண்டு மனம் ஒத்து காதல்கொண்டு காந்தர்வ மணம் புரிதல் களவொழுக்கம் எனப்படும். இதனைத்தான் திருவள்ளுவர் களவியலில் ஏழு அதிகாரங்களில் கூறுகிறார்.

தலைவன் தலைவியைக் கண்டு அவள் அழகில் மயங்கி,

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு

என்று தனக்குள் சொல்லிக்கொண்டதாகத் திருவள்ளுவர் காமத்துப்பாலின் முதற்பாட்டை இயற்றினார்.

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து.

என்று இரண்டாவது குறளைப் பாடினார்.

அப்படித் தலைவி தன்னை விரும்புவதை அறிந்து தலைவன், 'இவளைச் சொல்லாடிக் காண்பேன்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு, 'நல்லாய் கேள்!

நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென
முழங்குநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்கு
அணங்காகும் என்பதை அறிதியோ அறியாயோ?

என்று கேட்டதாகக் கபிலர் பாடினார். (கலித்தொகை 55.)

பட்ட பின்றை வரையாக் கிழவன்
நெட்டிடை கழிந்து பொருள்வயின் பிரிதலும்
பொருள்வயின் பிரியா தொருவழித் தணத்தலும்
புரைவ தென்ப கற்பால் ஆன

—இறையனூர் அகப்பொருள்
இலக்கணம் சூத்திரம் 25.

களவொழுக்கத்தில் திளைத்த தலைவன் தலைவியைத் திருமணஞ்செய்துகொள்வதற்காகப் பொருள் சம்பாதிக்கப் பிரிந்துபோனுலும், அவளைவிட்டுப் பிரிந்துபோய் ஓரிடத்தில் தங்கியிருந்தாலும், தலைவி அவன் வருகையை எதிர்ப்பார்த்திருப்பதால் அவள் கற்புடையவள் எனப்படுவாள். தலைவனுடைய பிரிவுதான் தலைவியின் கற்பை அயலார்க்கு எடுத்துக் காட்டுகிறது. அதனுல்தான் திருவள்ளுவர் கற்பியலின் முதல் அதிகாரத்தில் 'பிரிவாற்ருமை' கூறினுர்.

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.

என்று கற்பியலின் முதற்பாட்டை இயற்றினுர். தலைவன் பிரிந்தால் தலைவி உயிர் வாழமாட்டாள் என்றபடி,

வாழ்தல் உயிர்க் கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து. — குறள் 1124.

நோங்கால் அளியல் தானே யாக்கைக்கு
உயிரியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோளே.

அகநானூறு 339: 11-14.

திருக்குறளார் இயற்றிய திருக்குறள் காமத்துப்பால் நூலைப் படித்தால் சங்க இலக்கிய அகப்பாக்களின் சுவையை நுகர அவாவுண்டாகும் என்பது வெள்ளிடைமலை.

க. சண்முகசுந்தரம்

# காமத்துப்பால்

திருவள்ளுவர் அருளிய திருக்குறள் முறையே அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பிரிவுகளை உடையது. இவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று வழங்கப்படுகிறது. மூன்றாவது பகுதியாகிய காமத்துப் பாலின் சுருக்கம் காண்போம்.

இது, களவியல், கற்பியல் என இரண்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது, பிறர் அறியாமல் (களவு) மறைவாக நடைபெறுவதைக் கூறுவது களவியல். ஆடவனும் பெண் ணும் இயற்கையமைப்பால் எதிர்பாராதபடி ஒருவரை யொருவர் சந்திக்கும் வாய்ப்பு உண்டாகின்றது.

இயற்கையமைப்பால் எதிர்பாராதபடி அப்பெண்ணின் அழகில் முதலில் உள்ளத்தைப் பறிகொடுத்து மலைத்து நின்று ஆடவன் பேசுகின்றான். அவளுடைய உறுப்புக்களின் அழகு, தோற்றம் பற்றியெல்லாம் கூறுகின்றான்.

பிறகு அவளும் அவனைப் பார்க்கின்றாள். இருவரு டைய பார்வைகளும் தொடக்கத்திலிருந்து பலவகைகளாக அமைகின்றன. நோக்குகள் வளர்ந்து ஒருவர் உள்ளக் குறிப்பினை ஒருவர் புரிந்துகொள்ளுகின்றனர்.

மனம் ஒன்றுபட்டு விடுகின்றனர். காதலர் ஆயினர். இன்பம் நுகர்ந்தனர்: இன்ப மகிழ்ச்சியில் ஒருவரை யொருவர் பாராட்டிப் பேசிக் கொள்கின்றனர். இனிச் சந்திப்பில்லாமல் நாம் இருக்க முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டனர்.

இப்படியிருந்து வருகையில், பெண்ணின் பெற்றோர் காதல் ஒழுக்கத்தைத் தெரிந்துகொண்டனர், பெண்ணுக்குத் தடைபோட்டுவிட்டனர். காதலி காதலனைச் சந்திக்க முடியாமல் வேதனைப்படுகின்றாள். காதலனும் அப்படியே வருந்துகின்றான்.

காதலியைச் சந்திக்க முடியாத காதலன் முன்னர் நுகர்ந்த இன்பத்தினைப் பெற முடியாதவனாகி அல்லல் பட்டு உயிரையும் இழக்க முற்பட்டுவிடுகின்றான். தனது நாணத்தினையும் வீரத்தினையும் விட்டு, தான் அடைகின்ற துன்பத்தை ஊரார் அறியச் செய்ய எண்ணுகின்றான். ஊரார் அறியுமாறு செய்கின்ற பழக்கத்தை 'மடன் மா ஊர்தல்' என்று கூறுவார்கள்.

'பனை ஓலையில்' ஒரு மிருகம் போன்று செய்து அதன் மீது ஏறி ஊர் மக்கள் வெளிப்படையாகப் பார்க்குமாறு செல்வார்கள். இது ஒரு பழக்கம். காதலன் படுகின்ற அவல நிலையையும் தன்னுடைய காதலுக்குத் தடைபோட்டு இருப்பதையும் இச்செயல் வெளிப்படுத்தும், காதலன் 'மடன் மா' ஊர்தலைக் கண்ணுற்ற ஊரார், அவர்கள் இருவருக்கும் உண்டான காதலை அறிந்து பலவிதமாகத் தூற்றிப் பேசுகின்றனர்.

இவ்வாறிருக்க, தோழியின் துணையால் காதலர் இருவரும் ஒருமனப்பட்டுப் பெற்றோர்கள் அறியாதவாறு வெளியூர் சென்றுவிட முனைகின்றனர். இவர்கள் உள்ளத்தை நன்கு புரிந்துகொண்ட பெற்றோர் திருமணம் செய்து வைக்கின்றனர். களவியல் பகுதி இத்துடன் முடிந்தது.

அடுத்தது 'கற்பு இயல்' என்பதாகும். **களவியல்** பகுதியைவிட இப்பகுதி இருமடங்கு அதிகமான கருத்துக்களைக் கூறுவது எனலாம். இல்லறம் நடத்தும்போது நிகழ்வது கற்பியல், பெரும்பாலும் கற்பு நிறைந்த நாயகியின் குணங்களையும், உணர்ச்சிகளையும், தன்மைகளையும் எடுத்துக் காட்டுவதால் இப்பகுதி **கற்பியல்** எனப்பட்டது.

ஒவ்வொரு கருத்தினை விளக்குவதற்கும் ஒவ்வொரு அதிகாரம் கூறுகின்ற ஆசிரியர் — அன்புடைமை—அடக்கமுடைமை—பண்புடைமை என்பன போன்று 'கற்புடைமை' என்று ஒரு அதிகாரம் அமைத்துக் கூறுமல் 'கற்பியல்' என்ற பெயரில் ஒரு பகுதியே அமைத்துப் பதினெட்டு அதிகாரங்

களில் விளக்கம் செய்திருப்பது பன்முறையும் கற்பின் பெருஞ்சிறப்பினைச் சிந்திக்கவைப்பதாகும்.

இல்லறம் நடத்தி வாழ்ந்துகொண்டிருக்கும்போது, நாயகன் நாயகியைவிட்டுப் பிரிந்திருக்க நேருகிறது. ஒரு நாயகியின் கற்பின் திறம், நாயகன் பிரிந்திருக்கும்போது தான் அறியப்படும். இது ஆசிரியர் காட்டும் குறிப்பு ஆதலால்தான், கற்பியல் பகுதி 'பிரிவு ஆற்ருமை'' என்ற அதிகாரத்தை முதலாவதாகக் கொண்டிருக்கிறது.

பொருள் தேடல். போர்க்குச் செல்லுதல் என்பன போன்று நாயகன் பிரிந்து செல்லுவதற்குப் பல காரணங்கள் உண்டு. தலைவன் பிரிந்து செல்ல இருக்கின்ருன் என்பதனை அவன் முந்திய இரவில் தன்னுடன் இன்பம்நுகர்ந்த தன்மையிலிருந்தே ஒருவாறு தலைவி புரிந்துகொண்டாள். அவள், அவன் பிரிந்து செல்வதைத் தடுக்க முடியவில்லை. பிரிவுக்கும் உடன்பட்டாள். அவன் பிரிந்து சென்ருன். அவன் மேற்கொண்டு செய்யவேண்டிய பணி அவ்வளவு இன்றியமையாததாகும்.

தலைவன் பிரிந்தவுடனே தலைவியின் வேதனை தொடங்கிவிடுகின்றது. அவளுடைய வேதனை பல முறைகளில் வெளிப்படுகின்றது. அவ்வப்போது தோழி சிறிது துணையாக இருந்துவருகின்ருள். பிரிவை நினைக்க நினைக்க தலைவியின் வருத்தம் அதிகமாகிவிட்டது.

நாளுக்கு நாள் துன்பம் மிகுந்தது. உடம்பு மெலிவடைந்தது. நாயகனைக் காண அவள் கண்கள் துடிக்கின்றன. கண்கள் படுகின்ற துன்பத்தையெல்லாம் கூறுகின்ருள். இப்படியிருக்க அவள் உடல் மெலிந்தது மட்டுமல்லாமல், மேனி முழுவதும் பசலை நிறம் வந்துவிட்டது. இன்பம் இல்லாமல் துயருறுவதை இந்த நிறம் உணர்த்துவதாகும். அழகும் குறைந்துவிட்டது.

தனியாக இருக்கும் அவள், தனிமையில் உண்டாகின்ற எண்ணங்கள் தன்னைத் தின்கின்றன என்று கூறுகின்ருள். காம இன்ப வேகம் தாங்க முடியாதவளாகித் தவிக்கின்

ருள். இந்த நிலையில் அங்கமாகத் தனது நாயகன் நினைவு வந்துவிடவே அழுதுக் கொண்டிருக்கின்ருள். அவன் வருகைக்கு ஏங்கித் தணியாத துயரம் கொண்டவளானாள்,

அவள் நாள்தோறும் கனவு காணுகின்றாள். நினைப்பில் வலிமை புலனுகின்றது. தலைவனைக் கனவில் காணுகின்ற வாய்ப்பு அவளுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கின்றது. மாலைப்பொழுது வரும்போதெல்லாம் மிகப் பெரிய வேதனை அவளைத் தாக்குகின்றது.

நாளுக்கு நாள் உறுப்புக்களெல்லாம் அழகிழந்துவிடு கின்றன. அவரிடம் தூது அனுப்பலாமா என்றும் எண்ணு கின்ருள். தன்னுடைய நெஞ்சத்தோடு தானே போராட் டம் நடத்துகின்ருள். காமவேகம் அளவு கடந்து, உணர்ச் சியை மறைத்து வைக்க முடியாமல் தன்னை மீறி வெளிப் பட்டு விடுகின்றதே என்று தலைவி கூறுகின்ருள்.

இப்படியிருக்க, பணி மேல் சென்ற தலைவன் அங்கே வேலை முடியும் தருவாயில், தவியைக் காணும் வேட்கை மிகுந்தவன் ஆனன். அவளைக் கண்டு இன்பம் துய்க்கத் துடிக்கின்ருன். அவன் வேலையும் முடிந்தது. புறப்பட்டு விட்டான். வீடு வந்து சேர்ந்தான். பிரிந்தவர் கூடினர். இன்ப நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. பிரிந்திருந்து வந்தவன் தன் இன்ப நுகர்ச்சிகளை நிறைவேற்றுகிருன்.

நாயகி மீண்டும் கவலைக் குறிப்பினைக் காட்டுகின்ருள், ஏன்? 'மறுபடியும் நாயகன் பிரிவானே' என்பதே காரண மாகும். நாயகன் அவள் எண்ணத்தைப் புரிந்துகொண் டான். 'பிரியவில்லை' என்று உணர்த்தினன். அவள் மிகவும் மகிழ்ச்சி கொண்டாள்.

நாயகன் நாயகியிடையே நடைபெறுகின்ற புலவி நிகழ் கின்றது. அது ஊடல் என்று கூறப்படும். ஊடலில் நாயகி யின் அரிய நுட்பமான புத்திசாலித்தனம் எடுத்துக் காட்டப் படுகின்றது. புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என்ற அதிகாரங்களோடு இரண்டாவது இயலான கற்பியல் முற்றுப்பெற்று காமத்துப்பால் முடிவடைகின்றது.

# திருக்குறள்

## நூல் அமைப்புக் குறிப்பு

உலகிற்குப் பொதுமறை அளிக்க வந்த ஆசிரியர் திருவள்ளுவனார் உலகியல் நடைமுறைகளை மனதிற்கொண்டும், முன்னோர் மொழிந்த கருத்துக்களைத் தழுவியும், கொள்ள வேண்டியவைகளைத் தெளிவுபடுத்தியும், தமது நூலினை எழுதியுள்ளார் என்பது அறிந்துணர வேண்டியதாகும்.

எழுத்து, கல்வி, தூயஅறிவு இவைகளைத் தொடக்கத்திலேயே எடுத்துக் காட்டி இறைவனுக்கு விளக்கமும் வழிபாடும் கூறுகின்றார். இறைவன் உலகிற்கு முதன்மையானவன் என்ற முறையில் அமைத்துக் கூறாமல், உலகம் ஒருவனை முதலாவதாக உடையது என்று அமைத்துள்ளார். உலகின் மேல் வைத்துக் கூறியது மிகவும் சிந்தித்து அறிய வேண்டியதாகும்.

'வான் சிறப்பு' என்ற அதிகாரத்தில் உணரும் தன்மையினை உடையது—'உணரற்பாற்று' என்று குறிப்பிட்டுள்ளார். மழையில்லாவிட்டால், விழாக்களும், பூசையும் நடத்தமுடியாது என்று எடுத்துக்காட்டி, 'செல்லாது' என்று சொல்லிய சொல் உலகில் வழங்கும் முறையினைக் குறிப்பதாகும்.

'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் 'பனுவல் துணிபு' என்று கூறுகின்றார். பல நூல்களில் கண்ட முடிவு இதுவே யாகும் என்று முன்னோர் கருத்துக்களைத் தழுவியே கூறுகின்றார். நீத்தார்—முனிவர்—பெருமையினைக் குறிக்கும் போது 'மறைமொழி காட்டிவிடும்' என்று விளக்குகின்றார். 'உலகியல் உண்மையினைக் கண்டறிதல்' என்று கூறப்படும் முறையும் இதுவேயாகும்.

'இயல்பினன் இல்வாழ்க்கை வாழ்பவன்' என்று இல் லறத்தானைக் குறிப்பிடும்போது இல்வாழ்க்கைக்குரிய இயல் புடனே என்று அமைக்கின்றார். 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்' என்று கூறப்படுவது, 'உலகியலில் வாழ வேண்டிய முறையுடனே' என்பதைப் புலப்படுத்தி நடை முறையான தன்மையினைக் குறித்ததாகும். 'மங்கலம் என்ப' 'நன்கலம் நன்மக்கள்' என்று, 'வாழ்க்கைத் துணை நலம்' என்ற அதிகாரத்தில் கூறப்பட்டுள்ள முறை 'உலகில் அறிவு நிறைந்தவர்கள் கூறுவார்கள்' என்று ஆசிரியர் குறிப்பிடும் தன்மையினை எடுத்துக் காட்டுகிறது.

உலகில் அறிந்தோர் கூறுவதைக் கேட்டும், அறிந்தும், நூல்களைக் கற்றும் விளக்கம் தருகின்ற முறையில், 'யாம் அறிவதில்லை' என்று மக்கட்பேறு' என்ற அதிகாரத்தில் கூறு கின்றார், 'யாம் மதிப்பது இல்லை' என்ற பொருள்பட அமைக்கப்பட்டதாகும். இது ஒரு எடுத்துக்காட்டு. 'அறிந் தோர் சொல்லுவர்'— என்று கூறவேண்டி, 'என்ப' என்றும் 'அறுபத்து மூன்றும்' குறட்பாவில் குறிக்கின்றார். இது போன்று பல உள; தான் மட்டும் கண்ட உண்மையென்று கூறாமல், உலகியல் அறிஞர்களின் கருத்துமாகும் என்று ஆசிரியர் ஆங்காங்கே குறிப்பிடுவது நூலில் கூறப்பட்டவை கள் முடிந்த முடிபாகக் கொள்ளப்பட வேண்டியவைகள் என்பதை வலியுறுத்துகின்றது.

'என்று சொல்லுவர் அறிந்தோர்' என்கிற பொருளி லேயே, 'எழுபத்து மூன்றும்' குறட்பாவும் அமைக்கப்பட் டுள்ளது. 'எழுபத்தைந்தாம்' குறட்பாவும் அவ்வாறே அமைக்கப்பட்டுள்ளது. இப்படிப் பலப் பல; 'உயர்ந்தோர் கருதமாட்டார்கள்', என்ற பொருளில் 'வையாது உலகம்' என்று 'நூற்றுப் பதினேழாம்' குறட்பா காட்டுகிறது. தன் னுடைய கருத்து—என்று மட்டும் முடிவாக அனைத்தையும் கூறிவிடாமல், உலகில் உயர்ந்தோர்—அறிஞர்—கருத்துக் களையும் எடுத்துக் காட்டும் பண்பு ஆசிரியரின் சிறந்த முறை களில் ஒன்று என்பதை வெளிப்படுத்துவதாகும்.

'பலவற்றை ஆராய்ந்து பார்த்தாலும் இதுவேதான் துணை' என்னும் பொருளில், 'நூற்று முப்பத்திரெண்டாம்' குறட்பா, 'தெரிந்து ஓம்பித் தேரினும் அஃதே துணை' என்று குறிக்கின்றது. ஆசிரியர் தாம் நன்கு ஆராய்ந்தறிந்தே முடிவு சொல்லுகின்றார் என்ற பேருண்மை சிந்தனைக்கு உரியதாகும்.

'நூற்று நாற்பதாம்' குறட்பா மிகவும் சிந்திக்கத் தக்கதாகும். உலகத்தோடு பொருந்த நடந்து கொள்ளுவதை அறிந்துகொள்ளாதவர்கள், பல நூல்களையும் கற்றாராயினும், அறிவில்லாதவர்களே யாவார்கள். உலகியல் வாழ்வு——நன்னெறியில் வாழும் வாழ்க்கை—வற்புறுத்தப்பட்டது.

உலகில் அறிவுடைய பெரியோர்களின் கருத்தினை எடுத்துக் காட்டி, 'வையாரே—வைப்பர்' என்று 'நூற்று ஐம்பத்தைந்தாம்' குறட்பா கூறுகின்றது. 'உலகில் ஆராய்ந்து பார்த்து அறிந்து கொள்ள வேண்டும்', என்று 'நூற்று அறுபத்தொன்பதாம்' பாடல் குறிக்கின்றது. 'நினைக்கப்படும்' என்பது 'நூற்று அறுபத்தொன்பதாம்' குறட்பாவில் காணப்படுகிறது. 'இருநூற்று மூன்றும்' குறட்பாவில், ஆசிரியர் 'என்ப' என்று குறித்து, நல்லோர் சொல்லுவர்— என்று குறிப்பிடுகிறார். இவ்வாறே பல இடங்களிலும் கூறுகின்றார்.

'இருநூற்று முப்பத்திரெண்டாம்' பாடல், 'உரைப்பார் உரைப்பவை எல்லாம்' என்று குறிப்பிடுகிறது. இது உலகில் நடைமுறை வழக்கத்தினைக் காட்டுவதாகும். 'உலகில் நல்லோர் சொல்லுவர்'—என்பதனையே 'இருநூற்று முப்பத்தெட்டாம்' குறட்பா எடுத்துரைக்கின்றது. பிற இடங்களையும் காண்க; 'பல்லாற்றால் தேரினும்' என்று, 'இருநூற்று நாற்பத்திரெண்டாம்' குறட்பா கூறுவது—ஆசிரியர் பரந்த பற்பல நூல்களின் உண்மையினையும் நன்கு உணர்ந்து முடிவு செய்வதனைப் புலப்படுத்துகிறது. 'இவ்வுலக மக்களே சான்று' என்பதாக 'இருநூற்றுநாற்பத்தைந்தாம்' குறட்பா கூறுகிறது. 'உலகில் உயர்ந்தோர் சொல்லுவர்' என்ற

முறையில், 'இருநூற்று நாற்பத்தாறும்' குறட்பாவும் குறிக்கின்றது. 'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை' என்று ஆசிரியர் பற்பல முறைகளில் கண்டுணர்ந்த குறிப்பினையே சுட்டிக் காட்டுகிறார். இதனை, முன்னூறாவது' பாடல் குறிக்கின்றது.

'முன்னூற்று இருபத்திரெண்டாம்' குறட்பா, மிகவும் தெளிவாகவும், வெளிப்படையாகவும், ஆசிரியர் பற்பல நூல்களையும் ஆழ்ந்து அறிந்த பிறகே சீரிய உண்மையினை விளக்குகின்றார் என்று மெய்ப்பிக்கின்றது. 'நன்கு அறிந்தவர்கள் கூறுவர்' என்று, 'முன்னூற்று முப்பதாம்' குறட்பா அறிவிக்கின்றது. 'நூலோர் சொல்லுவர்' என்று ஆசிரியர் கூறும் முறையினையே 'முன்னூற்று அறுபத்தோராம்' பாடலும் குறிக்கின்றது. 'என்று உலகோர் சொல்லுவர்'—இவ்வாறு ஆசிரியர் குறிப்பிடும் முறையினை 'முன்னூற்றுத் தொண்ணூற்றிரெண்டாம்' பாடலும் குறிக்கின்றது.

'உலகு இன்புறக் கண்டு' என்று குறிப்பிடுகின்ற 'முன்னூற்றுத் தொண்ணூற்று ஒன்பதாம்' பாடல் சிந்திக்கத் தக்கதேயாகும். உலகம், உலகில் மேலோர்—உயர்ந்தோர்—அறிஞர்கள்—என்று அடிக்கடி ஆசிரியர் கூறுகின்ற முறை இவ்வுலகில் நல்ல தொண்டாற்றி வாழ்வதனை மிகவும் தெளிவுபடுத்துவதாகும். 'நானூற்று இருபத்தைந்தாம்' பாடல், 'உலகம் தழீஇயது ஒட்பம்' என்று கூறுவதும், அதறகு அடுத்த பாடல் 'எவ்வது உறைவது உலகம்' என்று கூறுவதும், உலகில் நடந்து கொள்ள வேண்டிய முறையில் நல்வழியில் நடந்து கொள்ளுவதனையே அறிவுடைமைக்கு அழகு என்று குறிப்பனவாகும்.

'கற்பதற்கு அருமையான பல நூல்களைக் கற்று குற்றங்கள் இல்லாதவர்களாக இருப்பவர்களிடத்திலும், நுண்ணியதாக ஆராய்ந்து பார்த்தால், அறியாமை இல்லாதிருப்பது அரிதேயாகும்' என்று 'ஐந்நூற்று மூன்றும்' பாடல் கூறுகிறது. உலக இயல்பினை முதன்மையாக வைத்து ஆசிரியர் நன்கு தெளிவுபடுத்துகிறார். 'உலகில் எவ்வகைப்

பட்ட நூலோர்களாக இருந்தாலும், அத்தனைபேருக்கும் ஒப்ப முடிந்த கருத்து இதுவேயாகும்' என்று 'ஐந்நூற்று முப்பத்து மூன்றும்' பாடல் உரைக்கின்றது. இவ்வாறு கூறுகின்ற முறை, ஆசிரியரின் தனிச் சிறப்பினைக் காட்டுவதாகும். 'நீதி நூலுடைய முன்னோர் கூறியதைப் பின்பற்றுக', என்று 'ஐந்நூற்று முப்பத்திரெண்டாம்' பாடல், குறிக்கின்றது. 'ஐந்நூற்று எழுபத்திரெண்டாம்' பாடல், 'உலகியல்' என்று சொல்லுகிறது. இவ்வாறே பிற இடங்களிலும் காணப்படுவதாகும்.

'உலகத்து இயற்கை' என்று 'அறுநூற்று முப்பத்தேழாம்' பாடல் எடுத்துக்காட்டி, உலகில் உயர்ந்தோர் பலரையும் தழுவியே வாழ்தல் — நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பதனைக் கூறுகின்றது. 'அறுநூற்று அறுபத்து இரண்டாம் பாடல்', 'ஆய்ந்தவர் கோள்' என்று குறிக்கின்றது. பற்பல பேராசிரியர்களின் கருத்துக்களையும் தாம் உணர்ந்து கூறும் பான்மையினை இது வெளிப்படுத்துவதாகும். 'நூலோர் சொல்லுவர்' என்று கூறி உணர்த்துகின்ற ஆசிரியரின் முறையினை 'எழுநூற்று முப்பத்தெட்டாம்' பாடலும் குறிக்கின்றது. 'உலகத்தார் உண்டு என்பது' என்று தொடங்கப்பெறும் 'எண்ணூற்று ஐம்பதாம்' பாடல் குறிப்பிடத்தக்கதேயாகும். 'என்ப' என்று 'தொள்ளாயிரத்துப் பதினெட்டாம்' பாடலும் குறிக்கின்றது. ஆராய்ந்த அறிஞர் கூறுவதாகும் என்பதையும் புலப்படுத்துகிறது. 'நூலோர்' என்று 'தொள்ளாயிரத்து நாற்பத்தோராம்' பாடல் கூறுகிறது. ஆசிரியர், நூலோர் பலருடைய கருத்துக்களைத் தழுவியும் எழுதுகிறார் என்பதற்கு இதுவுமோர் எடுத்துக்காட்டாகும்.

'தொள்ளாயிரத்து ஐம்பத்து மூன்றும்' குறட்பாவும், 'எண்பத்தோராம்' குறட்பாவும் 'என்ப' என்று குறித்துக் காட்டி ஆசிரியரின் அமைப்பு முறையினை மேலும் உரைக்கின்றன. அவ்வாறே, 'தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்றும்' குறட்பாவும் குறிக்கின்றது. இதற்கு அடுத்த

குறட்பா, 'வழக்கு' என்று சொல்லி, உலகத்தார் கூறுவர் என்று காட்டுகிறது. ''ஆயிரத்து இருநூற்று எண்பதாம்' குறட்பாவில், 'உடைத்து என்ப' என்று சொல்லி, ஆசிரியர் உலகியல் அறிஞர்களுக்கு ஒப்ப முடிந்ததையும் தழுவியே கூறுவதை எடுத்துக் காட்டுகின்றார்.

ஆசிரியர் திருவள்ளுவனார் தமது நுண்ணறிவு கொண்டும், முன்னோர் மொழிந்த பொன்னுரைகளைத் தழுவியும், உலக நடைமுறையில் உயர்ந்தோர், அறிஞர் கூறுபவைகளை மனதிற்கொண்டும் தமது நூலினை யாத்துள்ளார் என்ற பேருண்மை மேலே காட்டப்பட்ட சில எடுத்துக் காட்டுகளால் விளங்குவதாகும். நூலாசிரியர்கள் எழுதும் 'இயல்பு' என்று மட்டும் கொள்ளுதல் சிறப்புடைத்தன்று; பிறவற்றையும் அவ்வாறே நூலினைக் கற்றுணர்ந்து அறிதல் வேண்டும்

# காமத்துப்பால்

திருக்குறளில் கூறப்பட்டுள்ள மூன்று பெரும்பகுதிகளுள் மூன்றாவதாகக் கூறப்படுவது காமத்துப்பாலாகும். முதலிரண்டும் அறத்துப்பால், பொருட்பால் என்பனவாகும். இப்பிறவியில் நுகரப்படுவது காம இன்பமாகும். ஒரு காலத்தில் ஒரு பொருளால் ஐம்புலனும் நுகர்கின்ற காம இன்பத்தினைக் கூறுவது எனப்படுவதாகும்.

இது, புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். 'பிரிவு' என்னும் பகுதியில், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவைகள் அடங்கும். காமத்துப்பால், 'களவியல்,—கற்பியல்' என இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதாகும்.

காமத்துப்பால், 'இருபத்து ஐந்து' அதிகாரங்களைக் கொண்டுள்ளது. முதல் 'ஏழு' அதிகாரங்களும் களவியலில் அடங்கியுள்ளன. மற்றைய 'பதினெட்டு' அதிகாரங்களும் கற்பியலில் அடங்குவனவாகும். களவியல் என்பது புணர்ச்சியினையும், கற்பியல் என்பது, அதாவது 'பிரிவு' என்று கூறப்

படுவது, கற்பினையும் விளக்குகின்றன. 'இயல்' என்பது சிறு பகுதியாகும்.

**களவு இயல் :—** ஒத்த பருவமும் அழகும் நிறைந்த ஆடவனும் பெண்ணும், இயற்கையின் விளைவால் தாமே எதிர்ப்பட்டு அன்பு கொண்டு காதலர்களாகி இன்பம் நுகர்ந்து வாழ்வதனைக் 'களவியல்' எடுத்துரைக்கின்றது. இப்பகுதி 'ஏழு' அதிகாரங்களைக் கொண்டது.

## 109. தகை அணங்கு உறுத்தல்

*பெண்ணின் அழகு அவன் மனதில் இன்ப எண்ணத்தினை உண்டாக்கி வருத்தத்தினைச் செய்விக்கின்றது.*

1. அவனுடைய நெஞ்சம் மயங்குவதற்குக் காரணம் யாது? அப்பெண்ணின் தோற்றத்தில் தோன்றும் மூன்று வித தன்மைகள் யாவை? [1081]

2. எதிர் நோக்கு நோக்கியது யார்? அப்பெண் எதைக் கொண்டு தாக்குவது போல் இருந்தது? [1082]

3. ஆடவன் முன்பு அறிந்திருந்தது யாது? இப்போது அறிந்து கொண்டது என்ன? எவ்வாறு அறிய முடிந்தது? அமர் செய்வதைப் போல் இருந்தவை யாவை? [1083]

4. உயிர் உண்ணும் தோற்றத்துடனே இருந்தவை யாவை? யாருடைய உயிரை உண்ணுகின்றன? 'அமர்த்த கண்' என்று கூறப்பட்டது ஏன்? [1084]

5. மூன்று தன்மையினையுடைய நோக்கம் யாரிடத்திலிருந்து வந்தது? மூன்று தன்மைகளின் வேறுபாடுகள் யாவை? [1085]

6. நடுங்கும் துன்பத்தினைச் செய்பவை யாவை? புருவங்கள் கோணாமல் இருந்திருக்க வேண்டுமென்று அவன் குறிப்பிடுவது ஏன்? [1086]

7. பெண்ணின் மார்பகத்தின் மேல் போடப்பட்டிருப்பது யாது? அது எதனைப் போல் இருந்தது? 'கடாஅக்

களிறு' என்றது ஏன்? 'படாஅ' என்று குறிப்பிட்டுக் கூறிய காரணம் என்ன? [1087]

8. உடைந்தது எது? எந்த அழகைக் கண்டு உடைந்தது? அந்த வீர மறவனின் சிறப்பு எப்படிப்பட்டது? [1088]

9. அவளிடத்தில் அவன் கண்ட இரண்டு யாவை? அணிகலன்களை அணிவது ஏனோ என்று கூறிய காரணம் என்ன? [1089]

10. கண்டாலே மகிழ்ச்சி உண்டாக்குவது எது? உண்டால்தான் மகிழ்ச்சியளிப்பது எது? 'கள், தேன்' என்பவைகளுக்கும் காமத்திற்கும் உள்ள வேறுபாடுகள் என்ன? ]1090]

## 110. குறிப்பு அறிதல்

நோக்கத்தால் — பார்வைகளினால் உள்ளத்தில் ஒன்றுபட்ட காதலர்களின் குறிப்பினைக் கூறுவதாகும். எண்ணத்தினைக் குறிப்பால் அறிந்து கொள்ளுவதாகும்.

1. இரு நோக்கு என்பவைகள் யாவை? நோய் நோக்கு எது? மருந்தான நோக்கு எது? நோயும், மருந்தும் உண்டாக்கப்பட்டது எவ்வாறு? [1091]

2. செம்பாகம் என்றால் என்ன? அவள் பார்த்த சிறிய பார்வை, அவனுக்கு எப்படி இருந்தது? எந்த இன்பத்தின் பாதி யளவிற்கு மேற்பட்டதாகும்? [1092]

3. எதற்கு நீர் வார்த்தாள்? நீர் வார்த்த அந்தப் பார்வை எது? உள்ளத்தின் குறிப்பினை எவ்வாறு உணர்த்தினாள்? [1093]

4. எப்போது மெல்ல நகுதல் செய்தாள்? அவன் பார்க்கும்போது என்ன செய்தாள்? அவன் பார்க்காத போது அவள் செய்தது என்ன? [1094]

5. ஒரு கண்ணினால் அவள் செய்தது என்ன? உடனடியாக யாது செய்தாள்? நேரே குறிக்கொண்டு நோக்கினாளா? [1095]

6. விரைவில் அறிந்துகொள்ளப்படுவது யாது? புறத்தில் பேசும் சொற்கள் எப்படி இருந்தன? கடுமையான சொற்களை அவள் கூறுவதின் உள்நோக்கம் யாது? [1096]

7. சிறு சொல் என்பது யாது? அவ்வாறு அவன் கூறுவது ஏன்? பார்வை எப்படி இருந்தது? காதலர்களுக்குள் காணப்படும் குறிப்பு யாது? [1097]

8. அவன் எவ்வாறு நோக்கினான்? அப்போது அவள் என்ன செய்தாள்? அவள் இயல்பு எப்படி இருந்தது? அவள் நகைத்ததால் அவன் கண்ட குறிப்பு என்ன? [1098]

9. காதலர்களிடம் காணப்படும் நோக்கு யாது? 'ஏதிலார் போல நோக்குதல்' என்றால் என்ன? [1099]

10. 'கண்ணொடு கண்' என்பது யாருடைய கண்கள்? கண் இணை என்பதால் எவை உணர்த்தப்பட்டன? வாய்ச் சொற்கள் ஏன் பயனிலவாகும்? 'நோக்கு ஒக்கின்' என்றால் என்ன? [1100]

## 111. புணர்ச்சி மகிழ்தல்

குறிப்பறிந்த காதலர் இருவரும் இன்பம் நுகர்ந்த மகிழ்ச்சியினைக் கூறுதலாகும்.

1. அவன் நுகர்ந்த இன்பத்தினை எவ்வாறு விளக்குகின்றான்? 'ஐந்து' என்று குறிப்பன யாவை? அப்பெண்ணினை எவ்வாறு குறித்தான்? [1101]

2. அவள், 'தானே' மருந்தானாள்; எவ்வாறு? பிணி என்பது எதனை? மருந்து என்பது யாது? மருந்து, பிற என்பது, எதனைக் கருதி? அவன் அப்பெண்ணினை எவ்வாறு குறித்தான்? [1102]

3. மென்தோள் என்று யார் சொன்னது? எது இனிது? அவன் ஒப்பிட்டுக் கூறுவது யாது? 'வீழ்வார்' என்றால் என்ன? எங்கே துயில்கின்றான்? [1103]

4. காதலன் கேட்கும் கேள்வி யாது? அந்த வியப்பு ஏன் அவனுக்குத் தோன்றியது? பெற்றவள் யார்? நீங்கினல் தீ என்ன செய்யும்? எப்போது குளிர்ச்சியாகிறது? [1104]

5. காதலன் அப்பெண்ணினை எவ்வாறு குறிக்கின்றன்? 'அவை அவை போலுமே'— என்றல் என்ன? விரும்பும் போதெல்லாம் எவ்வாறு இருக்கின்றது? [1105]

6. பெண்ணின் தோள்கள் எதனல் செய்யப்பட்டவை யென்று அவன் கூறுகின்றன்? அவ்வாறு கூறக் காரணம் என்ன? தீண்டும்போது அவன் உயிர் எத்தன்மையாகிறது? [1106]

7. 'அரிவை முயக்கு' என்று குறிப்பது யாது? 'இல்' இருந்து செய்வது யாது? உண்ணுதல் எப்படி இருத்தல் வேண்டும்? ஏன் இவ்வாறு கூறுகின்றன்? [1107]

8. முயக்கு என்றல் என்ன? முயக்கிற்கு இடையே போகக்கூடாதது ஏன்? எப்போது முயக்கம் இனிது [1108]

9. காமம் கூடியவர்கள் பெற்ற 'மூன்று' பயன்கள் என்ன? உணர்தல் என்றல் என்ன? 'ஊடல்' வேண்டப் படுவது யாது குறித்து? [1109]

10. 'சேயிழை' என்று குறித்தது யாரை? காமத்தினை மென்மேலும் விரும்புவதற்குக் காரணம் யாது? 'அறியாமை' எப்போது உண்டாகின்றது? கண்டற்றல்-கண்டது போலும் —என்று கூறிய குறிப்பு என்ன? [1110]

## 112. நலம் புனைந்து உரைத்தல்

காதலியுடன் இன்பம் நுகர்ந்த பிறகு, காதலன் காதலி யினுடைய அழகினையும் சிறப்பினையும் கற்பனையால் புகழ்ந்து கூறுவது.

1. அனிச்ச மலர் என்ன நினைத்துக் கொண்டிருந்தது? அவனுடைய காதலியின் மென்மைத் தன்மை யாது? 'நின்னி னும்' என்று யாரைப் பார்த்து கூறுகின்றன்? [1111]

2. தன்னுடைய நெஞ்சினைப் பார்த்து அவன் கூறுவது யாது? ஏன் நெஞ்சம் மயங்குகிறது? காதலியின் கண்களுக்கு அவைகள் நிகராகுமோ? [1112]

3. காதலியின் தோள் எப்படி இருக்கிறது? மேனியின் தன்மை என்ன? பற்கள் எவை போன்றவை? அவள்பால் அவன் கண்ட நறுமணம் எத்தகையது? கண்கள் எப்படிப் பட்டவை? [1113]

4. குவளை மலருக்குப் பார்க்கும் தன்மை உண்டா? உண்டானால் என்ன செய்யும்? ஏன் அவ்வாறு செய்யும்? காதலியை அவன் எவ்வாறு குறிப்பிடுகின்றான்? கண்களுக்கு அது நிகராகுமோ? [1114]

5. காதலியின் இடுப்பு எத்தன்மையானது? அவள் தலையில் சூடியது என்ன? எவ்வாறு சூடிவிட்டாள்? அதனால் என்ன நேர்ந்து விடும்? எப்படிப்பட்ட பறை ஒலிக்கும்? [1115]

6. விண்மீன்கள் கலங்குவதற்குக் காரணம் என்ன? அவைகள் அறிய முடியாமல் போனது என்ன? ஏன் அப்படி ஆயிற்று? காதலியின் முகம் எப்படி இருந்தது? [1116]

7. காதலியின் முகத்திற்கும் சந்திரனுக்கும் உள்ள வேறுபாடு யாது? மாதர் முகத்தில் மறு உண்டா? மதிக்கு என்ன குறைபாடு? தேய்தல், வளர்தல் எதற்கு உண்டு? [1117]

8. மதியானது அவனால் காதலிக்கப்பட வேண்டு மென்று விரும்பினால், அது என்ன செய்ய வேண்டும்? அவன் காதலியின் முகத்தினைப்போல் மதிக்கு ஒளிவிட முடியுமா? [1118]

9. காதலன் 'மதிக்கு' கூறுவது என்ன? தனது காதலி யின் கண்ணழகினை எவ்வாறு கூறுகின்றான்? மதி, அவனு டைய காதலியின் முகத்ினை ஒத்திருக்க விரும்பினால், என்ன செய்ய வேண்டும்? [1119]

10, காதலியின் அடிகள்-பாதங்கள்-எப்படிப்பட்டவை? நெருஞ்சிப் பழத்தினை ஏன் குறிப்பிடுகின்றான்? அன்னத்தின் தூவியும் அனிச்ச மலரும், அவனுடைய காதலியின் அடிகளுக்கு எப்படிப்பட்ட வருத்தத்தினைக் கொடுக்கும்? [1120]

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

இன்பம் நுகர்ந்த காதலனும், காதலியும் தங்கள் தங்கள் காதல் மிகுதியினைக் கூறுவதாகும். இன்பம் நுகர்ந்தபின் நிகழ்வதாகும்.

1. பாலும் தேனும் கலந்தால் எப்படிப்பட்ட சுவையுள்ளதாக இருக்கும்? இதனை அக்காதலன் எதற்கு ஒப்பிடுகின்றான்? 'ஊறிய நீர்' எதனைக் குறிக்கின்றது? 'வால் எயிறு' என்று குறிப்பிட்டது யாது? [1121]

2. மடந்தை என்று குறிக்கப்பட்டது யார்? காதலன்—காதலி தொடர்பு எப்படிப்பட்டதாக இருக்கிறது? 'என்ன, அன்ன' என்பவைகள் குறித்தவை என்ன? [1122]

3. காதலன், இடமில்லை என்று கூறுகின்றான்—யாருக்கு? ஏன்? 'நீ' என்று யாரைக் கூறினான்? பாவைகள் இருக்குமிடம் எது? ஏன் போகும்படி கூறினான்? [1123]

4. நீங்கும்போது காதலனுக்கு எப்படி இருக்கின்றது? இன்பம் நுகரும்போது எப்படி இருப்பதாகக் கூறுகின்றான்? 'வாழ்தல்—சாதல்' என்று எதைக் குறிக்கின்றான்? [1124]

5. 'மறப்பு' அறியேன் என்று கூறுபவன் யார்? காதலியை எவ்வாறு சிறப்பித்துப் பேசுகின்றான்? மறந்தறியேன் என்று கூறியது ஏன்? 'நினைத்தலும் அறியேன்' என்று அவன் கூறுவது எதற்கு? [1125]

6. தனது காதலரை அவள் எவ்வாறு குறிப்பிடுகின்றாள்? அவ்வாறு குறிப்பிடக் காரணம் யாது? காதலரை அவள் எங்கே வைத்துக் கொண்டிருக்கின்றாள்? [1126]

7. காதலர் எங்கே இருப்பதாகக் கூறுகின்றாள்? அதனால் அவள் செய்யாதிருப்பது எது? ஏன் அவ்வாறு செய்யாமலிருக்கின்றாள்? கண்களுக்கு என்ன செய்வது வழக்கம்? [1127]

8. காதலர் எங்கே இருக்கின்றார்? அவள் குறிப்பிடுகின்ற இடம் எது? சூடாக உண்ணுவதற்கு ஏன் அஞ்சுகின்றாள்? காதலரை என்ன செய்யுமென்று நினைக்கின்றாள்? [1128]

9. இவ்வூர் என்ன சொல்லுகின்றது என்று கூறுகின்றாள்? ஊரார் அவ்வாறு கூறுவதற்குக் காரணம் யாது? அவள் இமைக்காமல் இருப்பது ஏன்? துயிலாதிருக்கின்றாள் என்று ஊரார் சொல்லுவது ஏன்? [1129]

10. காதலர் இருந்து கொண்டிருக்கும் இடம் எது? ஊரார் என்ன கூறுகின்றார்கள்? காதலி வருந்திக் கூறுவது யாது? [1130]

## 114. நாணுத் துறவு உரைத்தல்

காதலி காதலனைக் காண முடியாமல் பெற்றோரால் தடுக்கப்பட்டு விட்டாள். காதலன் மிகுதியும் வருந்துகின்றான். நாணத்தினையும் விட்டுவிடுகின்ற நிலை உண்டாகிவிடுகின்றது. மடன்மா ஏறுதற்கு முடிவு செய்துவிட்டான்.

1. காம மிகுதியால் காதலன் துன்புறும் நிலை உண்டானது ஏன்? அவனுக்கு இந்த நேரத்தில் பாதுகாப்பாக எதனை நினைக்கின்றான்? மடன்மா ஏறுதல் என்பது என்ன? [1131]

2. அவனுடைய உடம்பு எப்படி இருக்கின்றது? உயிர் எத்தன்மையில் இருக்கின்றது? உயிரும் உடம்பும் என்ன நினைப்பதாகக் கூறுகின்றான்? நாணம் என்னவாயிற்று? [1132]

3. முன்பெல்லாம் அவன் பெற்றிருந்ததது என்ன? அந்த இரண்டும் இப்போது எங்கே போயின? 'பண்டுடையேன்—இன்றுடையேன்,' என்று ஏன் கூறுகின்றான்? [1133]

4. கடும்புனல் என்பது எது? ஆண்மையினையும், நாணத்தினையும் அது என்ன செய்தது? 'கொண்டு போய் விட்டதே' என்று எதனைக் கூறுகின்றான்? [1134]

5. காதலியை அவன் எவ்வாறு குறிக்கின்றான்? அவள் தந்தது எது? குறுந்தொடி யார்? 'துயர்' அவனுக்கு எப்போது மிகுதியாக உண்டாகிறது? [1135]

6. நடுநிசியிலும் அவன் என்ன நினைக்கின்றான்? அவன் கண்கள் எப்படி இருக்கின்றன? காதலியை எவ்வாறு குறித்துப் பேசுகின்றான்? [1136]

7. பெண்ணின் பெருமை எவ்வாறு கூறப்படுகிறது? அதற்குக் காரணம் என்ன? கரையற்றது எது? காமம் எது போன்றதென்று கூறப்படுகின்றது? [1137]

8. காமம் என்ன செய்கிறது? பலரும் அறிய மன்றத்திற்குச் சென்றது எது? காதலி தன்னுடைய நிலையினை எவ்வாறு எடுத்துரைக்கின்றாள்? 'காமம் இரக்கங்காட்டுதல் வேண்டும்' என்று கூறுவதற்கு யாது காரணம்? [1138]

9. தன்னை எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டுமென்று நினைத்துக் காமம் என்ன செய்கின்றது? ஊர்த் தெருக்களில் காமம் எவ்வாறு சுழன்று போகின்றது? 'அம்பலமாகி விட்டது' என்பதனை எவ்வாறு குறிக்கின்றான்? [1139]

10. சிரிப்பவர்கள் ஏன் அவ்வாறு செய்கின்றனர்? எப்போது நகைக்கின்றனர்? அவர்கள் தெரிந்துணர்ந்து கொள்ளாதிருப்பது என்ன? சிரிப்பவர்கள் எவ்வாறு குறிக்கப்படுகின்றனர்? [1140]

# 115. அலர் அறிவுறுத்தல்

ஆடவனும், பெண்ணும் காதலர்களாகிவிட்டனர் என்பதனை ஊரார் அறிந்து பலவிதமாகத் தூற்றிப் பேசுவதை அறிந்துகொண்டு காதலர்கள் வருந்துதலும், சிந்தித்தலுமாகும்.

1. அவனுடைய உயிர் போகாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? ஊரார் பேசிக்கொள்வது யாது? 'அலர்' பேசுவதை அவன் 'பாக்கியம்' என்று ஏன் கூறுகின்றான்? இந்த உட்பொருளைப் பலர் அறியாதிருப்பது 'பாக்கியமே' என்று கூறுவது ஏன்? [1141]

2. காதலியின் அருமையினை எவ்வாறு குறிக்கின்றான்? அவள் எப்படிப்பட்ட கண்ணாள்? இந்த ஊர் என்ன செய்தது? ஊர் மக்கள் அறிந்துகொள்ளாதிருந்தது எது? [1142]

3. ஊரார் அலர் தூற்றிப் பேசுவதைக் குறித்து அக்காதலன் என்ன நினைக்கின்றான்? காதலர்களைப்பற்றி ஊரார் பேசுவது எப்படிப்பட்ட நினைப்பினை அவனுக்கு உண்டாக்குகின்றது? [1143]

4. காமம் மலர்வது எதனால் என்று கூறுகின்றான்? 'கவ்வை' என்பது எது? 'கவ்வை' இல்லையென்றால் காமம் என்னவாகும்? 'அலர்' எடுப்பது நன்மையே என்று அவன் கூறுவது ஏன்? [1144]

5. களிக்கும்போதெல்லாம் கள்ளுண்பார்க்கு எப்படி இருக்கும்? காமம் எவ்வாறு இன்பம் தருகின்றது? 'இனிது' என்று அவன் கூறுவது எதனைக் குறித்து? [1145]

6. காதலர்களின் சந்திப்பு எவ்வாறு பரவிவிட்டது? 'அலர்' எதனைப் போல் பலரறியச் செய்துவிட்டது? 'திங்களைப் பாம்பு கொண்ட நிகழ்ச்சி' எதற்காகக் கூறப்பட்டது? [1146]

7. காமநோய் எவ்வாறு வளர்கின்றது? தாய் கண்டித்துப் பேசுவதின் பயன் யாது? நீராகவும் எருவாகவும் இருப்பவை யாவை? பயிராகக் கூறப்படுவது எது? [1147]

8. 'நெய்' ஏன் குறிக்கப்பட்டது? நெருப்பினை எதனால் அணைக்கமுடியாது? அலர் தூற்றுவதால் காமத்தினை அழித்து விட முடியுமா? எதற்கு எது சமம்? [1148]

9. ஊரார் தூற்றிப் பேசுவதற்கு 'தான் நாணமடைதல்' கூடாது என்பதற்குக் காதலி கூறும் காரணம் யாது? கூடியபோது காதலன் கொடுத்த வாக்குறுதி யாது? இப்போது காதலன் என்ன செய்து விட்டான்? அவள் குறிப்பிடுவது எது? [1149]

10. ஊரார் கவ்வை எடுப்பது நன்மைக்கே என்று அவள் ஏன் குறிப்பிடுகின்றாள்? 'யாம் விரும்புவது அதுவே' என்று கூறுவது எதனைக் கருதி? தான் விரும்புவது போன்று காதலர் நடப்பார் என்று கூறுவதின் கருத்தென்ன? [1150]

**கற்பு இயல்:—** திருமணம் செய்துகொண்டு நாயகனும் நாயகியுமாக வாழ்க்கை நடத்துவதைக் கூறுவதாகும். பொருள் தேடும் பொருட்டும் பிற காரணங்களினாலும் நாயகன் நாயகியை விட்டுப் பிரிந்து செல்லுகின்றான். பிறகு திரும்பி வருகின்றான். பிரிந்திருக்கும்போது நிகழ்கின்ற நிகழ்ச்சியினையும்—காதலர் நிலைமையினையும்—பின்னர் வந்தபோது நிகழ்வனவற்றையும் கூறுவது கற்பியலாகும்.

இப்பகுதி, பிரிவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி கூறுவதும், அவளுக்குத் தலைமகள், தானே அவன் குறிப்பால் உணர்ந்து கூறுதலும், பிரிவு உணர்த்தியபோது கூறுதலும், தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறுதலும் என, 'நான்கு' வகைகளாகக் கூறப்படும். இப்பகுதி—கற்பியல், —'பதினெட்டு' அதிகாரங்களைக் கொண்டதாகும்.

# 116. பிரிவு ஆற்றமை

நாயகன் நாயகியை விட்டுப் பிரிந்து செல்லுவதையறிந்த தலைமகள் பிரிவுத் துன்பத்தினைத் தாங்க முடியாத நிலைமை யினைக் கூறுவதாகும்.

1. பிரிவினைக் கூறவந்த நாயகனுக்கு நாயகி என்ன கூறினாள்? 'விரைவில் வருவேன்' என்று கூறிய நாயகனுக்கு அவள் கூறிய பதில் யாது? அவள், 'உரை' என்று குறிப் பிட்டதின் கருத்து யாது? [1151]

2. நாயகன் பார்வை எப்படி இருந்ததாகக் கூறுகின் றாள்? ஏன் அச்சம் கொண்டாள்? புணர்வு பிரிந்து செல்லு வான் என்று உணர்த்தியதாக ஏன் கூறினாள்? [1152]

3. அறிவுடையார் என்று கூறப்பட்டவர் யார்? அத னால் குறிக்கப்பட்டது என்ன? அவர்—நாயகர்—அன்புடை யவர் என்று நம்புவதற்கில்லை என்று நாயகி ஏன் கூறு கின்றாள்? [1153]

4. 'தன் மீது குற்றமில்லை' என்று எவ்வாறு குறிக்கின் றாள்? அந்த நாளில் காதலன் கூறியது என்ன? சொன்ன தற்கு மாறாக அவன் செய்தது என்ன? [1154]

5. நாயகியின் உயிர் பிரியாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும்? நாயகன் பிரிந்து சென்று விட்டால் என்ன நடக்கும்? அவரைக் கூடுதல் பிறகு முடியாது என்று அவள் கூறக் காரணம் என்ன? [1155]

6. நாயகரை, 'வன்கண்ணர்' என்று ஏன் கூறுகின் றாள்? அவன் அவளிடம் யாது கூறினான்? அவர் திரும்பி வந்து அன்பு காட்டுவார் என்பது நடவாது என்று ஏன் கூறு கின்றாள்? [1156]

7. வளையல்கள் என்ன உணர்த்தின? எவ்வாறு உணர்த் தின? துறைவன் யாது செய்தான்? 'தூற்றுகின்றன' என்று ஏன் குறித்தாள்? [1157]

8. துன்பம் தருவது எது? அதனை விடத் துன்பம் தருவது என்று எதனைக் குறித்தாள்? இனியார் என்று யாரைக் குறித்துப் பேசுகின்றாள்? [1158]

9. தொட்டால் சுடும் தீ எது? விட்டால் சுடும் தீ எது? நோய் என்று குறிப்பிட்டது எது? இருவகைப்பட்ட தீயிலும், கொடிய தீ எது? [1159]

10. அல்லல் நோய் யாது? பிரிவினைப் பொறுத்திருப்பவர்களைப் பற்றி நாயகி என்ன கூறுகின்றாள்? 'வாழ்வார் பலர்' என்று அவள் குறிப்பிடுவதின் கருத்து யாது? [1160]

## 117. படர் மெலிந்து இரங்கல்

நாயகன் பிரிந்த துன்பத்தினையே நினைத்து நாயகி மெலிந்து இரங்குதலாகும்.

1. ஊற்று நீர் எது? ஊற்று நீர் போல் மிகுவது எது? காம நோயினை அவள் மறைக்க முயற்சிப்பதால் நடப்பது யாது? [1161]

2. காம நோயினை நாயகியால் மறைத்து வைக்க முடிகிறதா? காம நோயினை யாருக்குச் சொல்லலாம் என்று நினைக்கின்றாள்? உரைக்க முடியாமல் தடுப்பது எது? [1162]

3. காவடித்தண்டு எது? காமமும் நாணமும் என்ன செய்கின்றன? அவள் உடம்பு எப்படி இருக்கின்றது? [1163]

4. அவளுக்கு இப்போது இருப்பது எது? எது இல்லை என்று கூறுகின்றாள்? எதனை நீந்த வேண்டும் என்று கருதுகின்றாள்? [1164]

5. துன்பத்தினைச் செய்பவர் யார்? எப்படிப்பட்ட சூழ்நிலையில் அவர் செய்கின்றார்? பகைமையாய் இருந்தால் யாது செய்வாரோ என்று குறிக்கப்படுபவர் யார்? [1165]

6. காம இன்பத்தின் அளவு எவ்வாறு கூறப்படுகிறது? நாயகன் பிரிவால் வரும் காம வேதனையின் அளவு எப்படி இருக்கின்றது? 'இன்பம்—துன்பம்'—என்று குறிக்கப்படும் காலம் எது? [1166]

7. எந்தக் கரையினை அவளால் காணமுடியவில்லை? காமத்தினை எப்படி அவள் குறிக்கின்றாள்? அவள் நீந்திவிட முயற்சிப்பது எது? நள்ளிரவிலும் எப்படி இருப்பதாகக் கூறுகின்றாள்? [1167]

8. இரவுப் பொழுதுக்குத் துணையாக இருப்பது யார்? மற்றவர்கள் எல்லாம் ஏன் துணையாக இல்லை? எல்லோரையும் துயில் என்ன செய்தது? [1168]

9. நாயகரை எவ்வாறு குறிக்கின்றாள்? நாயகர் கொடுமையினைவிட இரவுப் பொழுதினை ஏன் கொடியது என்று கூறுகின்றாள்? இப்போது, இரவுப் பொழுது எவ்வாறு கழிகின்றது? [1169]

10. அவளுடைய மனம் எங்கு செல்ல நினைக்கின்றது? அவ்வாறு செல்லுவதால் உண்டாகும் நன்மை யாது? கண்கள் என்ன செய்து கொண்டிருக்கின்றன? [1170]

## 118. கண் விதுப்பு அழிதல்

நாயகனைக் காணாமல் கண்கள் துன்புற்று நாயகனைக் காண விரைகின்றன என்பதாம்.

1. கண்களைப் பார்த்து நாயகி என்ன கூறுகின்றாள்? கண்கள் துன்பப்படுவது ஏனோ என்று அவள் குறிப்பது எதனைக் கருதி? இந்தக் காமநோய் அவளுக்கு எவ்வாறு உண்டாயிற்று என்று கூறுகின்றாள்? [1171]

2. ஆராய்ந்தறியாமல் கண்கள் செய்த தவறு என்ன? இது நம்மால் நேர்ந்ததென்று உணர வேண்டியது யார்? கண்கள் துன்பப்படுவதில் அர்த்தமில்லை என்று நாயகி ஏன் கூறுகின்றாள்? [1172]

3. தொடக்கத்தில் காதலரைக் கண்கள் எவ்வாறு நோக்கின? இப்போது அவைகள் என்ன செய்கின்றன? இது நகைப்புக்கு இடமானது என்று அவள் ஏன் குறிக்கின்றாள்? [1173]

4. கண்களின் நிலை எவ்வாறுள்ளது? அவளுக்கு இந் நோயினை உண்டாக்கக் காரணமாக இருந்தவை எவை? ஒழிவில்லாத நோய் எது? [1174]

5. கடலும் சிறிதாகும் வண்ணம் பெரிதான நோய் எது? அதனை உண்டாக்கிய கண்கள் இப்போது எவ்வாறு உள்ளன? [1175]

6. தனக்குக் காம நோயினைத் தேடிக் கொடுத்த கண் களைப் பற்றி அவள் யாது நினைக்கின்றாள்? அவைகள் துன்புறுவதை இனிது என்று ஏன் கூறுகின்றாள்? [1176]

7. காதலரை முதலில் கண்கள் கண்ட தன்மையினை எவ்வாறு விளக்குகின்றாள்? 'நீர் அறுக' என்று ஏன் கூறு கின்றாள்? [1177]

8. மனத்தால் விரும்பாமல் சொல் மாத்திரத்தால் மட்டும் விரும்பியவர் யார்? அவர் இருப்பதால் பயன் யாது? கண்கள் 'அமைந்திருப்பவையல்ல' என்று ஏன் கூறு கிறாள்? [1178]

9. நாயகர் வராதபொழுது கண்கள் என்ன செய் கின்றன? நாயகர் வந்த பிறகு என்ன செய்கின்றன? கண் களின் நிலையினை எவ்வாறு குறித்தாள்? [1179]

10. மனதில் அவளால் ஏன் மறைத்து வைக்க முடிய வில்லை? பறையடிப்பது போன்றவை எவை? ஊரார்க்கு எளிமையாக இருக்குமாறு செய்வது எது? [1180]

## 119. பசப்புறு பருவரல்

*நாயகன் பிரிவினால் வருத்தம் மிகுந்து மேனியின் நிறம் வேறுபட்டுப் பசப்பு நிறம் அடைவதாகும்.*

1. நாயகன் பிரிய விரும்பியபோது அவள் என்ன செய்தாள்? அதனால் நேர்ந்தது என்ன? அவளுடைய நிலையினை யாருக்காவது அவள் சொல்ல முடியுமா? [1181]

2. பசப்பு நிறம் என்ன செய்கிறது? பசப்பு நிறமானது என்ன நினைத்துக்கொண்டு அவ்வாறு செய்கிறது? பசப்பு நிறத்தினை உண்டாக்கியவர் யார்? [1182]

3. நாயகர் கொண்டு சென்றது என்ன? அவர் கொடுத்துவிட்டுப் போனதாக அவள் சொல்லுவது எவை? 'கைம்மாறு' என்று அவள் குறிப்பிடுவது என்ன? [1183]

4. அவள் மனதில் நினைத்திருப்பது என்ன? அவள் பேசிக் கொண்டிருப்பது என்ன? அப்படி இருந்தும் என்ன நடந்து விட்டது? [1184]

5. காதலர் சென்றவுடன் நடந்தது என்ன? இங்கே நடந்தது என்ன? அவர் சென்றவுடனேயே வந்தது எது? [1185]

6. பசப்பு வந்த நேரத்தினை அவள் எவ்வாறு குறிக்கின்றாள்? இருள் எப்போது வருகிறது? எப்படி வருகிறது? 'முயக்கம்' முடிந்தவுடனே நடந்தது என்ன? [1186]

7. 'பசப்பு' எந்த முறையில் வந்தது? முன்னொரு நாள் அவள் எப்படி இருந்தாள்? பிறகு என்ன செய்தாள்? உடனே நடந்து விட்டதை எவ்வாறு குறிக்கின்றாள்? [1187]

8. ஊரார் என்ன பேசுகின்றனர்? அவர்கள் என்ன பேசவேண்டுமென்று அவள் நினைக்கின்றாள்? 'துறந்தார்' என்று அவள் குறிப்பவர் யார்? 'இவள்' என்பதின் குறிப்பு யாது? [1188]

9. நாயகரைப் பற்றி அவள் நினைப்பது என்ன? அவள் விருப்பம் யாது? மேனி பசப்பு நிறம் பெற்ருலும், இருக்கட்டும் என்று எவ்வாறு ஆறுதல் பெறுகின்ருள்? [1189]

10. 'பசப்பு' என்ற பேர் பெறுதல் நன்று என்று ஏன் கூறுகின்ருள்? ஊரார் என்ன செய்ய வேண்டுமென்று விரும்புகின்ருள்? தூற்றுபவர்கள் யார்? [1190]

## 120. தனிப்படர் மிகுதி

துன்ப மிகுதி அவளுக்கே உண்டாகின்றது. அறமும் பொருளும் கருதி பிரிந்த நாயகனிடம் இல்லை; பிரிந்திருக்கும் நாயகி தனது துன்ப மிகுதியினைக் கூறுதலாகும்.

1. கனி என்பது எது? அது எப்படிப்பட்ட கனி? அக் கனியைப் பெறும் மகளிர் யார்? அக்கனியைப் பெற எவ்வாறு இருத்தல் வேண்டும்? [1191]

2. நாயகன் வந்து செய்ய வேண்டியது என்ன? உலகில் வாழ்வார்க்கு வேண்டியது என்ன? மழை பெய்வது எதற்கு ஒப்பிடப்படுகிறது? [1192]

3 கணவர் செய்ய வேண்டியது யாது? அதனுல் நாயகியின் மனேநிலை எப்படியாகும்? 'செருக்கு' என்பது குறிப்பது யாது? 'வாழுநம்' என்று எப்போது சொல்லுவாள்? [1193]

4. கற்புடைய மகளிர் வேண்டி இருப்பது எது? அவர்கள் பிறரால் நன்கு மதிக்கப்பட வேண்டுமானுல் நாயகன் என்ன செய்ய வேண்டும்? நல்வினை இல்லாதவ ராவார் என்று கூறுவது ஏன்? [1194]

5. நாயகன் என்ன செய்ய வேண்டும்? செய்யா திருப்பது என்ன? நாயகி காதல் மிகுதியாக இருந்தும் ஏன் பயனில்லை? [1195]

6. காவடித் தண்டிற்கு எது தேவை? எது காவடித் தண்டு—என்று கூறுகின்ருள்? 'காமம்' எப்படி இருப்பதாகக் கூறுகின்ருள்? இனிமையாக இருப்பதற்கு என்ன வேண்டும்? [1196]

7, 'காமன்' என்ன செய்கின்ருன்? அவன் அறியா திருப்பது என்ன? அவன் எவ்வாறு இருக்க வேண்டும் என்று நினைக்கின்ருள்? [1197]

8. வன்கண்ணர் என்று யாரைக் குறிக்கின்ருள்? அவ் வாறு கூறக் காரணம் யாது? இன்சொல் பெற வேண்டியது யாரிடமிருந்து என்று கூறுவாள்? வீழ்வார் யார்? [1198]

9, அன்பில்லாமல் இருப்பவர் யார்? அவர் என்ன சொல்ல வேண்டும் என்று விரும்புகின்ருள்? அவள் செவிக்கு இனியது எது? [1199]

10. நெஞ்சினைப் பார்த்து என்ன கூறுகின்ருள்? நெஞ்சு என்ன செய்ய நினைக்கின்றது? அது முடியுமா? 'கடலைத் தூர்க்க முயற்சிப்பாயாக' என்று ஏன் கூறுகின்ருள்? [1200]

## 121. நினைந்தவர் புலம்பல்

முந்திய நாட்களில் இருவரும் இன்பம் நுகர்ந்ததை நினைத்து வருந்துவதாகும்; தலைமகள் வருந்துவதும் தலைமகன் வருந்துவதுமாம்;

1. காமம் இனிது என்பதற்குக் கூறப்படும் காரணம் யாது? 'கள்' எத்தன்மையானது? தீரா பெருமகிழ்ச்சி யினை உண்டாக்குவது எது? [1201]

2. பிரிந்தவரை நினைத்தவுடன் என்ன உண்டாகிறது? காமம் இனிதுதான் என்பதற்குக் காரணம் என்ன? துன்பமே இல்லையென்று அவள் கூறுவது எதனைக் கருதி? [1202]

3. நாயகிக்குத் தும்மல் வருகின்றதா? அது ஏன் கெட்டுவிடுகிறது? நாயகன் என்ன செய்வதாகக் கருதுகிறாள்? அவர் என்ன செய்யவில்லை என்று நினைக்கின்றாள்? [1203]

4. அவளுடைய நெஞ்சில் இருப்பவர் யார்? எப்படி இருக்கின்றார்? அவருடைய நெஞ்சத்தில் நாயகி இருந்து கொண்டிருக்கின்றாளா? [1204]

5. அவருக்கு நாணமில்லையா என்று ஏன் கூறுகின்றாள்? 'கடி கொண்டார்'--என்று குறிக்கப்பட்டவர் யார்? நாயகர் ஓயாமல் செய்துகொண்டிருப்பது என்ன? [1205]

6. நாயகி நினைத்துக்கொண்டிருப்பது என்ன? அதனால் அவள் அடையும் பயன் என்ன? அவள் உயிரோடு இருப்பதற்குக் காரணம் யாது என்று சொல்லுகின்றாள்? [1206]

7. உள்ளம் 'சுடும்' என்று ஏன் கூறுகின்றாள்? எப்போது சுடும்? இன்பத்தினை மறந்தறியேன் என்று அவள் கூறுவதின் கருத்து யாது? மறந்தால் என்னவாள்? [1207]

8. காதலரை எவ்வாறு பெருமை படுத்துகிறாள்? காதலர் எதற்கு கோபிக்க மாட்டார்? அவர் செய்யும் இன்பம் எது? அவள் நினைப்பதை எவ்வாறு குறிக்கின்றாள்? [1208]

9. முன்பெல்லாம் காதலர் என்ன கூறினர்? அவள் மிகுதியாக நினைத்துக்கொண்டிருப்பது எது? அவளுடைய உயிர் எவ்வாறு கழிந்துகொண்டிருக்கின்றது? [1209]

10. மதியினைப் பார்த்து அவள் வேண்டிக் கொள்ளுவது என்ன? அவ்வாறு வேண்டுவதற்குக் காரணம் யாது? இருவராலும் நோக்கப்படுவது எது? 'விடாது சென்றார்' என்று குறிப்பிடுவதின் நோக்கம் யாது? [1210]

## 122. கனவு நிலை உரைத்தல்

நாயகன் பிரிந்திருக்கும்போது நாயகி கனவு காண்கின்றாள். அந்த நிலையினைப் பற்றிக் கூறுவதாகும்.

1. காதலர் விடுத்த தூது யாது? ஏன் அவ்வாறு கூறுகின்றாள்? கணவனுக்கு என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகின்றாள்? [1211]

2. கண்களை எவ்வாறு குறிக்கின்றாள்? கண்கள் யாது செய்ய வேண்டுமென்று விரும்புகின்றாள்? அவ்வாறு விரும்புவதற்குக் காரணம் யாது? [1212]

3. உயிர் இருப்பதற்கு அவள் கூறும் காரணம் என்ன? காதலர் என்ன செய்யாமல் இருக்கின்றார்? கனவினால் என்ன நன்மை அவளுக்கு உண்டாகிறது? [1213]

4. கனவு என்ன வேலை செய்கிறது? கனவில் அவளுக்கு உண்டாவது என்ன? அதனால் பயன் என்ன? நனவில் வராதவர் எப்போது வருகின்றார்? [1214]

5. நனவில் அவருடன் இருந்தபோது என்ன உண்டாயிற்று? இப்போது கனவில் என்ன உண்டாகிறது? இரண்டும் அவளுக்கு எப்படி இருக்கின்றன? [1215]

6. நனவு இருக்கக் கூடாது என்று ஏன் கூறுகின்றாள்? 'காதலர் நீங்க மாட்டார்' என்று குறிப்பது ஏன்? எப்போது நீங்காமல் இருப்பாரென்று அவள் நினைக்கின்றாள்? [1216]

7. நாயகரை ஏன் 'கொடியர்' என்று சொல்லுகின்றாள்? எப்போது வந்து வருத்துகிறார்? நனவில் வந்து என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கின்றாள்? [1217]

8. அவள் தூங்கிக் கொண்டிருக்கும்போது நாயகர் என்ன செய்கின்றார்? அவள் விழித்தவுடனே என்ன செய்கின்றார்? எங்கே செல்லுகின்றார்? [1218]

9. கனவில் கண்டறியாத மகளிர் என்ன கூறுகின்றனர்? 'நோவர்' என்று யாரைக் குறிக்கின்ருள்? நனவினுன் நல்காதவர் யார்? [1219]

10. ஊர் மக்களின் அறியாமையினை நாயகி எவ்வாறு குறிக்கின்ருள்? 'நீத்தார்' என்று ஏன் சொல்லுகிருர்கள்? நாயகன் எப்போது வந்து போகிருர்? [1220]

## 123. பொழுது கண்டு இரங்கல்

மாலைப்பொழுது வந்தபோது நாயகி நாயகனை நினைத்து வருத்தமுறுவதைக் கூறுவதாகும்.

1. மாலைப் பொழுதைப் பார்த்து என்ன கூறுகின்ருள்? முன்பு வந்த மாலைப் பொழுது இல்லை என்று ஏன் குறித்தாள்? இப்போது வரும் மாலைப் பொழுது எப்படிப்பட்டதாக இருக்கின்றது? [1221]

2. மயங்கி வருகின்ற மாலைப் பொழுதிற்கு என்ன கூறுகின்ருள்? 'வன்கண்ணதோ' என்று குறிப்பது யாது? மாலைப் பொழுதினுடைய துணையும் எப்படி இருக்கின்றது? [1222]

3 மாலைப் பொழுது வருகின்ற தன்மை யாது? முன்பெல்லாம் மாலைப்பொழுது எப்படி வந்தது? மாலைப் பொழுது வருவதால் வளர்கின்றது எது? [1223]

4. ஏதிலர் என்பவர் யார்? காதலர் இல்லாதபோது மாலைப் பொழுது யாரைப் போல வருகின்றது? கொலைக் களம் என்பது எது? [1224]

5. காலை நேரத்தினைப் பார்த்து என்ன கூறுகின்ருள்? மாலைப்பொழுதினைப் பார்த்து என்ன குறிக்கின்ருள்? நன்மை செய்வது எது? பகையாய் இருப்பது எது? [1225]

6. மணந்தார் இருந்தபோது எப்படி இருந்தாள்? அப்போது அவளுக்குத் தெரியாதிருந்தது என்ன? மாலை நேரம் நோய் செய்வதை எப்போது தெரிந்து கொண்டாள்? நோய் என்பது யாது? [1226]

7. நோய் எது? அரும்புவது எப்போது? போதாக உண்டாவது எந்த நேரத்தில்? மலருவது எப்போது? [1227]

8. 'ஆயன் குழல்' என்ன செய்கிறது? அக்குழல் முன்பு எப்படி இருந்தது? இப்போது எப்படி இருக்கிறது? மாலைக்கு எது தூதாக இருக்கின்றது? கொல்லும் படையாக இருப்பது எது? [1228]

9. முன்பெல்லாம் மயங்கி இருந்தது யார்? இப்போது மயங்கி வருவது எது? அவள் நிலை என்னவாகும் என்று கூறுகின்றாள்? மாலை எத்தன்மையில் வருகின்றது? 'பதி' எப்படி இருக்கும் என்று குறிக்கின்றாள்? [1229]

10. நாயகர் எந்த நோக்கம் உடையவர் என்று கூறுகின்றாள்? அவளுடைய உயிர் எந்த நிலை அடைகின்றது? ஏன் அந்த நிலையினை அடைகின்றது? [1230]

## 124. உறுப்பு நலன் அழிதல்

நாயகன் பிரிவால் துன்பமுற்றிருக்கும் நாயகியின் அவயவங்கள் அழகினை இழக்கின்றன என்பதைக் கூறுவதாகும்.

1. நாயகன் பிரிவால் நேர்ந்ததென்ன? சிறுமை என்று எதனைக் குறிக்கின்றாள்? கண்கள் நாணமுறுவதற்குக் காரணம் யாது? நாயகன் சென்றிருப்பதை எவ்வாறு கூறுகிறாள்? [1231]

2. கண்களின் தோற்றம் எப்படி இருக்கின்றது? கண்கள் பேசுவது எப்படி இருக்கின்றது? அவைகள் அந்த நிலைமைக்கு வந்த காரணம் யாது? [1232]

3. அந்த நாட்களில் தோள்கள் எப்படி இருந்தன? அது எந்த நாள்? இப்போது எப்படி இருக்கின்றன? 'அறிவிப்ப போலும்' என்று அவள் கூறுவதன் குறிப்பு என்ன? [1233]

4. தோள்கள் இழந்ததாகக் கூறப்படுவது யாது? துணை நீங்கியதால் என்ன நேர்ந்தது? சோர்ந்து விட்டவை எவை? வாடியவை எவை? பைந்தொடி எது? [1234]

5. தோள் என்ன உரைக்கின்றது? கொடியார் என்று ஏன் கூறுகின்றாள்? 'தொல்கவின்' என்று குறிக்கப்பட்டது எது? வளையல்கள் என்ன ஆயின? [1235]

6. நாயகி நொந்து கொள்வதற்குக் காரணம் என்ன? வளையல்கள் ஏன் கழலுகின்றன? அதனால் பிறர் என்ன கூறுகின்றனர்? நாயகன்பால் அவள் கொண்டுள்ள அன்பு எவ்வாறு புலப்படுத்தப்படுகிறது? [1236]

7. நெஞ்சிற்கு எவ்வாறு சிறப்புரை கூறுகின்றாள்? நாயகருக்குச் சொல்லவேண்டியது என்ன? தோள்கள் என்ன செய்கின்றன? எவ்வாறு கொடியவரானார்? [1237]

8. இறுக முயங்கிய கைகளை என்ன செய்தான்? அதைக் கண்டு அவளுடைய நுதல் என்ன செய்தது? பசப்பு நிறம் பெற்ற காரணம் யாது? [1238]

9. கண்களை எவ்வாறு குறிக்கின்றாள்? குளிர்ந்த காற்று எங்கே சென்றது? எப்போது சென்றது? கண்கள் பசப்படைந்த காரணம் யாது? [1239]

10. ஒளி பொருந்திய நெற்றி என்ன செய்தது? அதைக் கண்டு கண்கள் என்ன செய்தன? கண்கள் பசப்புத் துன்பமுற்றது ஏன்? இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் காரணம் யாது? [1240]

## 125. நெஞ்சொடு கிளத்தல்

**துன்பமுற்ற நாயகி, தனக்கு யாதொரு பற்றுக்கோடும் இல்லாமல் செய்வதறியாது தனது நெஞ்சுடனே பேசுதலாகும்.**

1. 'ஒன்று சொல்லாயோ' என்று நெஞ்சினைப் பார்த்து அவள் ஏன் கேட்கின்றாள்? நோயினை எப்படிக் குறிக்கின்றாள்? எதற்கு மருந்து வேண்டுகின்றாள்? [1241]

2. நெஞ்சிற்குப் 'பேதைமை' என்று கூறக் காரணம் யாது? நாயகரிடத்தில் எது இல்லை என்று பேசுகின்றாள்? நெஞ்சு என்ன செய்து கொண்டிருக்கின்றது? [1242]

3. நெஞ்சு இங்கே இருந்து என்ன செய்கிறது? ஏன் வருந்துகிறது? 'பைதல் நோய்' எது? அதனைச் செய்தவர் யார்? அவரிடத்தில் இல்லாதது என்னவென்று அவள் குறிக்கின்றாள்? [1243]

4. 'தின்னுகின்றன' என்பதாக எவைகளைக் கூறுகின்றாள்? ஏன் அவ்வாறு செய்கின்றன? நெஞ்சினைப் பார்த்து என்ன வேண்டுகின்றாள்? நெஞ்சம் எங்கே செல்ல இருக்கின்றது? [1244]

5. காதலர் என்ன செய்து விட்டார்? காதலி தன்னுடைய நிலைமையினை எவ்வாறு எடுத்துரைக்கின்றாள்? நாயகரைப் போல நாயகியும் இருந்துவிட முடியுமோ? [1245]

6. 'பொய்க் கோபம்' காட்டுவது எது? ஏன் அவ்வாறு பேசுகின்றாள்? கலந்துணர்த்தும் தன்மையர் யார்? நாயகனைக் கண்டால் நெஞ்சம் என்ன செய்யும்? [1246]

7. 'இரண்டு' என்று அவள் கூறுவது யாவை? ஏன் ஒன்றினை விட்டுவிடுமாறு கூறுகின்றாள்? அவளால் செய்ய முடியாமலிருப்பது எதுவென்று குறிப்பிடுகின்றாள்? [1247]

8. நெஞ்சினைப் பார்த்து அவள் பேதையென்று ஏன் சொல்லுகின்றாள்? அது செய்வது என்ன? பிரிந்தவர் என்ன செய்வார் என்று நெஞ்சம் நினைக்கின்றது? [1248]

9. காதலர் இருக்கும் இடம் எது? நெஞ்சம் எங்கே செல்ல இருக்கின்றது? அதற்கு அவள் கூறும் விளக்கம் யாது? காதலன்பால் காதலி கொண்டுள்ள அன்பு எவ்வாறு புலப்படுகிறது? [1249]

10. அழகினை இழப்பதற்கு அவள் கூறும் காரணம் யாது? 'துறந்தார்' என்று குறிக்கப்படுபவர் யார்? நாயகரை எங்கே வைத்துக் கொண்டிருக்கின்றாள்? அதனால் விளைவது என்ன? [1250]

## 126. நிறை அழிதல்

மனதில் அடக்கி வைத்திருக்க வேண்டியவைகளை அவ்வாறு செய்ய முடியாதிருக்கும் நிலைமை உண்டாகி விடுதலாகும்; 'நிறை குணம்' கெடுவதாகும்.

1. உடைப்பது எது? உடைபடுவது எது? 'கணிச்சி' என்பது எது? அது என்ன செய்கிறது? தாழ்ப்பாள் எது? கதவு யாது? காமம், நிறைகுணம், நாணம் இவைகளின் நிலை என்ன? [1251]

2. 'காமம்' என்ன செய்கின்றது? அதனுடைய செயல் எவ்வாறு கூறப்படுகிறது? அதனை இரக்கமற்றது என்று ஏன் கூறுகின்றாள்? நள்ளிரவிலும் அது என்ன செய்கின்றது? [1252]

3. அவள் மறைப்பது எதனை? மறைக்க முடிகின்றதா? எவ்வாறு வெளிப்பட்டு விடுகிறது? அடக்க முடியாதது எது வென்று குறிப்பிடுகின்றாள்? [1253]

4. தன்னைப் பற்றி என்ன கூறுகின்றாள்? 'காமம்' என்ன செய்து விடுகின்றது? காமம் கடந்து செல்வது எதனை? எங்கு வெளிப்படுகின்றது? [1254]

5. காமநோய் கொண்டார் அறியாதது என்ன? 'பெருந்தகைமை' என்று குறிப்பது எது? செற்றார் என்று யாரைக் குறிக்கின்றாள்? செல்லாதிருக்க அவளால் முடியுமா? [1255]

6. காமத்துயர் வந்த காரணத்தை எவ்வாறு விளக்கம் செய்கின்றாள்? 'செற்றவர்' யார்? பின்சேறல் வேண்டி நினைப்பது யார்? உற்ற துயர் எது? [1256]

7. நாணம் என்பதே தெரியவில்லை என்று ஏன் சொல்லுகின்றாள்? எப்போது தெரியவில்லை என்று குறிப்பிடு கின்றாள்? காமத்தால் பேணியாரைப் பற்றி அவள் நினைப் பது யாது? [1257]

8. 'பன்மாயக் கள்வன்' என்று அவள் குறிப்பிடக் காரணம் யாது? அவன் பேசும் மொழி எப்படி இருக் கின்றது? அவனுக்குப் படையாக இருப்பது எது? அப்படை என்ன செய்கின்றது? பெண்மைக்கு உயர் குணம் எது? [1258]

9. என்ன எண்ணத்துடனே சென்றாள்? என்ன நடந் தது? அவ்வாறு அவள் ஏன் செய்தாள்? நெஞ்சம் என்ன செய்தது? அதனால் அவள் செய்ய வேண்டியதானது யாது? [1259]

10. நிணம் (கொழுப்பு) தீயிலிடப்பட்டால் என்ன வாகும்? அத்தன்மைத்தான நெஞ்சம் யாருக்குண்டு? அப்படிப்பட்ட நெஞ்சம் இருப்பதால் என்ன செய்யமுடிய வில்லை? யாது செய்யலாம் என்று எண்ணினாள்? [1260]

## 127. அவர் வயின் விதும்பல்

*பிரிந்திருக்கும் நாயகனும் நாயகியும் வேட்கை மிகுதி யினால் ஒருவரையொருவர் காணுதற்கு விரைதல் பற்றி கூறுவதாகும்.*

1. கண்கள் ஒளி இழந்ததற்குக் காரணம் என்ன? அவை என்ன செய்தன? விரல் ஏன் தேய்ந்து போயிற்று? சுவரில் என்ன செய்தாள்? ஏன் அவ்வாறு செய்தாள்? [1261]

2. காதலரை மறக்க முடியாது என்று ஏன் கூறுகின் றாள்? 'இலங்கிழாய்' என்று யாரை அழைத்தாள்? தோள் மேல் என்ன நடக்கும் என்று குறிப்பிடுகின்றாள்? கழிவது எது? [1262]

3. எதனைத் துணையாக நினைத்து நாயகன் சென்றான்? அவர் விரும்பிச் சென்றது எது? அவள் இதுவரை இருந்து கொண்டிருப்பதற்கு யாது காரணம் கூறுகின்றாள்? [1263]

4. நெஞ்சம் என்ன செய்கின்றது? யாரை நினைத்து அவ்வாறு செய்கின்றது? ஏறும் என்று எதனை நினைத்துக் குறித்தாள்? பிரிந்தார் வரவு எத்தகைய நிலையினை உண்டாக்கி விடுகிறது? [1264]

5. 'பசப்பு' எப்போது நீங்கும் என்று கூறுகின்றாள்? 'தோள்' எப்படி இருக்கின்றது? 'கண்டபின்' என்ன நடக்கும்? 'காண்க' என்று எவைகளைப் பார்த்துக் கூறுகின்றாள்? [1265]

6. 'வருக' என்று அவள் கூறுவதன் குறிப்பு யாது? 'பருகுவல்' என்று எதனைக் குறிப்பிடுகின்றாள்? 'பைதல்' நோய் எப்போது கெடும்? ஒரு நாள் என்பது எதனை வெளிப்படுத்துகிறது? [1266]

7. யாது செய்வேன் என்று ஏன் திகைத்துக் கூறுகின்றாள்? தன்னுடைய நாயகனை எவ்வாறு குறிக்கின்றாள்? ''புலப்பேன், புல்லுவேன், கலப்பேன்'', என்றெல்லாம் அவள் வியப்புறக் காரணம் என்ன? [1267]

8. வேந்தனைப் பற்றி நாயகன் என்ன நினைக்கின்றான்? மனைக்குப் போய் என்ன செய்ய நினைக்கின்றான்? மாலையில் என்ன செய்ய வேண்டுமென்பது அவனுடைய விருப்பமாக இருக்கின்றது? [1268]

9. ஏங்குபவர் யார்? ஒரு நாளைய பிரிவு அவளுக்கு எப்படி இருக்கின்றது? காதலர் எங்கே சென்றவராகக் கூறுகின்றாள்? [1269]

10. பிரிவினால் காதலியின் நிலைமை எவ்வாறு இருக்கும் என்று காதலன் நினைக்கின்றான்? உள்ளம் 'உடைந்துவிட்டிருக்கும்' என்று ஏன் கருதுகின்றான்? அந்த நினைப்பால் அவன் கூறுவன யாவை? [1270]

## 128. குறிப்பு அறிவுறுத்தல்

பிரிந்து போன நாயகன் திரும்பி வந்து விடுகின்றான். ஒருவரை ஒருவர் சந்தித்து ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவித்தலாகும்.

1. அவள் என்ன செய்கின்றாள்? அவள் உள்ளத்தில் மறைத்து வைத்திருந்தாலும், வெளிப்படுத்தி விடுவது எது? 'ஒன்று உண்டு' என்று குறிப்பது எதனைக் காட்டுகிறது? [1271]

2. அவளுடைய அழகினை எவ்வாறு கூறுகின்றான்? தோள்கள் எவ்வாறு குறிக்கப்பட்டன? அவளிடத்தில் மிகுதியாக நிறைந்திருந்தது எது? [1272]

3. மணிகளுக்குள்ளே காணப்படுவது எது? அப்பெண்ணின் அழகினுள்ளே புலப்பட்டுத் தோன்றுவது யாது? 'ஒன்று உண்டு' என்று குறிப்பது எதனைக் கருதி? [1273]

4. முகை மொக்குள் இருப்பது எது? அது எப்படி இருக்கிறது? அப்பெண் நகைக்கின்ற குறிப்பில் உணர்த்தப்பட்டது எது? 'ஒன்று உண்டு' என்று கூறிய மறைபொருள் என்ன? [1274]

5. காதலியை எவ்வாறு குறிக்கின்றான்? அவள் மறைத்த குறிப்பு எப்படிப்பட்டது? 'மருந்து' ஒன்றினை உடையதாக இருக்கின்றது என்று எதனைக் கண்டு கூறினான்? [1275]

6. பிரிந்திருந்து வந்த நாயகன் நாயகி மகிழும் வண்ணம் எவ்வாறு நடந்து கொண்டான்? இது நாள்வரை பொறுத்திருந்த அவளுக்கு உண்டான சிந்தனை யாது? [1276]

7. வளையல்கள் உணர்ந்து கொண்டது எது? அவைகள் எப்போது உணர்ந்து கொண்டன? வளையல்கள் உணர்ந்து கொண்டன என்று எதனால் கூறுகின்றாள்? [1277]

8. காதலர் எப்போது பிரிந்து சென்றதாகக் கருதுகிறாள்? 'மேனிப் பசந்தது' எப்போது? '' நாயகன் பிரிந்து செல்லுவான் '' என்ற குறிப்பு எவ்வாறு உணர்த்தப்பட்டது? [1278]

9. அவள் செய்த மூன்று செயல்கள் யாவை? தொடியை நோக்கியது ஏன்? மென் தோள்களைப் பார்த்தது ஏன்? கடைசியாகத் தனது அடிகளை நோக்கியது எதனைக் கருதி? [1279]

10. கண்கள் சொல்லுவது யாது? அவள் இரந்து நிற்பது எதற்கு? காம நோயினைச் சொல்லியவை யாவை? இயல்பாகிய பெண்மைக்குணம் மேலும் ஒரு பெண் தன்மையினைப் பெற்றதென்று கூறப்பட்டதன் கருத்து யாது? [1280]

## 129. புணர்ச்சி விதும்பல்

நாயகனும் நாயகியும் உள்ளத்தில் உண்டான வேட்கை மிகுதியினால் இன்பம் நுகர்தற்கு விரைதல் பற்றிக் கூறுவதாகும்.

1. கள்ளிற்கு இல்லாத குணம் என்ன? காமத்திற்கு இருக்கும் குணம் என்ன? நினைத்தபோது என்ன உண்டாகும்? கண்டபோது என்ன உண்டாகும்? [1281]

2. எப்போது ஊடாதிருத்தல் வேண்டும்? தினையளவும் என்ன செய்யாதிருத்தல் வேண்டும்? நிறையவரின் என்பது எதைக் குறிக்கின்றது? [1282]

3. கொண்கன் செய்வது என்ன? கண்கள் என்ன செய்கின்றன? நாயகன் எப்போது அவ்வாறு செய்தான்? [1283]

4. நாயகி தோழி இடத்தில் என்ன சொன்னாள்? நாயகனிடத்தில் என்ன நினைத்துக் கொண்டு சென்றாள்? என்ன நடந்து விட்டது? நெஞ்சு என்ன செய்தது? அவள் மறந்தது என்ன? [1284]

5. மை தீட்டும்பொழுது காண முடியாதது எது? எதனால் காணமுடியவில்லை? கொண்கன் பழியினை அவளால் எப்போது காண முடியவில்லை? [1285]

6. கணவனைக் காணும்போது எதனைக் காண முடியவில்லை? கணவனைக் காணாதபோது எதனைக் காணாதிருக்க முடியவில்லை? அவ்வாறு ஏன் சொல்லுகின்றாள்? [1286]

7. இழுத்துக் கொண்டு போவது எது? புனலைப் போன்று செயல்படுவது யாது? புலந்திருந்தால் பயனுண்டா? ஏன் இல்லை? புலந்து நிற்க ஏன் நினைத்தாள்? [1287]

8. 'கள்வ' என்று யாரைக் குறிக்கின்றாள்? துன்பம் செய்கின்றது எது? நாயகன் மார்பினை எதற்குச் சமமாக நாயகி ஒப்பிட்டுக் கூறுகின்றாள்? [1288]

9. மலரினைவிட மென்மைத் தன்மை வாய்ந்தது எது? அத்தன்மையறிந்து நடந்து கொள்ளுபவர்களை என்னவென்று குறிப்பிட்டார்? [1289]

10. முன்பு ஒரு நாள் நாயகி எவ்வாறு நடந்து கொண்டாள்? ஊடலினை எவ்வாறு காட்டினாள்? புல்லுதலில் எவ்வாறு இருந்தாள்? அதற்குக் காரணம் என்ன? [1290]

## 130. நெஞ்சொடு புலத்தல்

*சிறு பிணக்கு எனப்படும் ஊடலினைச் செய்யக் கருதாத நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும் தலைமகன் புலத்தலுமாகும்.*

1. நாயகன் நெஞ்சு எப்படி நடந்து கொள்ளுகிறது? நாயகியின் நெஞ்சு எப்படி இருக்கின்றது? நாயகி தனது நெஞ்சினைப் பார்த்து என்ன கேட்கின்றாள்? [1291]

2. தனது காதலரை என்னவென்று குறிக்கின்றாள்? நெஞ்சு அவரை அறிந்து கொண்டதோ? அவர் என்ன செய்ய மாட்டார் என்று நெஞ்சு நினைக்கின்றது? நெஞ்சம் எங்கு செல்ல நினைக்கின்றது? [1292]

3. நெஞ்சம் அவரிடம் செல்வதற்கு யாது காரணம்? அதனை நாயகி எவ்வாறு சொல்லுகின்றாள்? நெஞ்சம் என்ன நினைத்துக்கொண்டு இருக்கிறது? கெட்டவர் யார்? [1293]

4. நெஞ்சம் செய்யாதிருப்பது என்ன? அதனை நாயகி எவ்வாறு குறிக்கின்றாள்? நெஞ்சத்தினைப்பற்றி அவள் நினைப்பது யாது? அதனால் நெஞ்சிடம் என்ன கூறினாள்? [1294]

5. முதலில் நெஞ்சம் அஞ்சிக் கொண்டிருப்பது எதற்கு? பிறகும் அஞ்சிக்கொண்டிருப்பது எதற்கு? ஆதலால் நாயகி நெஞ்சத்தினை எப்படிப்பட்டதென்று கூறுகின்றாள்? [1295]

6. நெஞ்சு எப்படி இருக்கின்றது? அவளைத் தின்பது போல் இருப்பது எது? எந்த நேரத்தில் அவ்வாறு இருக்கின்றது? ஏன் அப்படிப்பட்ட துன்பம் தருகிறது? [1296]

7. காதலர் யாரை மறந்திருக்கிறார்? அவள் மறந்துவிட்டது எது? அவளால் மறக்க முடியாமல் இருப்பது எது? தன்னுடைய நெஞ்சினை எவ்வாறு அழைக்கின்றாள்? [1297]

8. 'உயிர்க்காதல் நெஞ்சு' என்று குறித்தது யார்? எதனை இளிவு என்று எண்ணுகின்றாள்? நாயகன் திறத்தினையே நினைத்துப் பேசுவதின் காரணம் என்ன? [1298]

9. துன்பம் ஏன் வந்தது? எப்போது வந்தது? துன்பத்திற்குத் துணையாக இருப்பது எது? துன்பத்திற்கு எப்போதும் துணையாக இருக்க வேண்டியது யாது? [1299]

10. தமக்கு உரியதாக இருப்பது எது? அதுவே துணையாக இல்லாவிட்டால் வேறு யார் இருப்பார்கள்? அயலார் துணையாக இருப்பார்களா? [1300]

## 131. புலவி

இருவரும் இன்பம் நுகரும் பொருட்டு ஒன்றான நேரத்தில் ஒருவரோடு ஒருவர் பிணங்குதலாம்; புலத்தலாம்.

1. நாயகியைப் புல்லாதிருக்கக் கூறிய காரணம் யாது? தோழி ஏன் அவ்வாறு கூறினாள்? அல்லல் நோய் எது? யாரிடம் காண வேண்டுமென்று விரும்பினார்கள்? [1301]

2. புலவியின் அளவு என்ன? உப்பு எதற்காகக் கூறப்பட்டது? ஊடல் மிகுந்துவிட்டால் என்னவாகும்? [1302]

3. புலந்த மகளிரை என்ன செய்ய வேண்டும்? புல்லாமல் இருக்கலாமா? அப்படி இருப்பதால் என்ன நடக்கும்? 'அலந்தார்' என்பது யாரைக் குறிக்கின்றது? [1303]

4. வாடிய வள்ளி எது? அது எவ்வாறு இருக்கும்? 'வாடிய' என்று கூறப்பட்டதன் காரணம் யாது? யார் ஊடிக்கொண்டிருந்தது? முதல் அரிதல் என்பது எதைக் குறித்தது? [1304]

5. நல்ல நாயகனுக்கு அழகாவது எது? தலைவி எவ்வாறு குறிக்கப்பட்டாள்? புலவி நிகழ்தல் விரும்பத்தக்கதா? [1305]

6. காமத்திற்குத் தேவையானது எது? துனி என்றால் என்ன? புலவி என்றால் என்ன? கனியும் கருக்காயும் எதற்குச் சமம்? துனியும் புலவியும் இல்லாதிருந்தால் என்னவாகும்? [1306]

7. ஊடலிலும் துன்பம் உண்டா? அந்தத் துன்பம் எதனால் உண்டாகின்றது? நீட்டிக்குமோ—நீட்டியாதோ என்பது எதனைக் குறித்துக் கூறப்பட்டது? [1307]

8. காதலர் நொந்து கொள்ளுவதால் பயனுண்டா? எப்போது பயனில்லை? 'அதனை அறியும்' என்பது குறித்தது எது? [1308]

9. புலவி எப்போது இனிதாக இருக்கும்? காதலர் எவ்வாறு இருத்தல் வேண்டும்? நீர் எப்போது இனிமையாக இருக்கும்? நிழல் எதற்காகக் கூறப்பட்டது? [1309]

10. ஊடலினை உணங்க விடலாமோ? அப்படிப்பட்டவரிடம் கூடுவதற்கு நினைப்பதன் காரணம் என்ன? நெஞ்சத்தின் அவா என்ன செய்துவிடுகிறது? [1310]

## 132. புலவி நுணுக்கம்

நாயகனும் நாயகியும் ஓர் அமளிக்கண் இருந்தபோது நாயகனிடம் ஊடுதற்குக் காரணம் இல்லாவிட்டாலும், நுண்ணிய காரணத்தைக் காட்டி அவள் புலத்தல் என்பதாகும்.

1. பெண் தன்மையுள்ளவர்கள் எல்லாம் என்ன செய்வார்கள்? 'பரத்த' என்று ஏன் கூறுகின்றாள்? 'பொது உண்பர்' என்று கூறியதால் குறிக்கப்பட்டது யாது? [1311]

2. ஊடிக் கொண்டிருக்கும்போது நாயகர் என்ன செய்தார்? காதலி என்ன செய்வாள் என்று நினைத்தான்? தும்மலைக் கண்டு அவள் தெரிவித்த கருத்து யாது? [1312]

3. அவள் கோபித்துக் கொண்டாளா? ஏன் அவ்வாறு செய்தாள்? 'காட்டிய சூடினீர்' என்று சொன்னது யார்? அவ்வாறு சொன்னதின் கருத்து யாது? [1313]

4. நாயகியைப் பார்த்து நாயகன் என்ன சொன்னான்? அதற்கு அவள் என்ன பதில் சொன்னாள்? ஏன் ஊடிக் கொண்டாள்? 'யாரினும், யாரினும்' என்றதன் குறிப்பு யாது? [1314]

5. கண் நிறைய நீர் கொண்ட காரணம் யாது? இப்பிறப்பில் எப்படி இருப்போம் என்று கூறினான்? 'பிரியமாட்டோம்' என்று கூறியதற்கு ஏன் அழுதாள்? [1315]

6. அவன் கூறியது யாது? நினைத்தேன் என்று கூறிய நாயகனுடன் ஏன் பிணங்கிக்கொண்டாள்? புல்லாதிருப்பது அவள் கூறிய காரணம் யாது? [1316]

7. அவன் தும்மியவுடனே அவள் என்ன செய்தாள்? பிறகு ஏன் அழுதாள்? அதற்கு என்ன காரணம் சொன்னாள்? அவன் வேறு யாரையாவது நினைத்தானா? [1317]

8. தும்மலை அவன் ஏன் அடக்கினான்? அவன் அடக்கியதற்குக் காரணம் என்ன? அடக்கியதால் அவள் கண்ட குற்றம் யாது? 'மறைத்திரோ' என்று ஏன் கூறினாள்? [1318]

9. அவன் தன்னுடைய நிலையினை எவ்வாறு உணர்த்தினான்? அவ்வாறு உணர்த்தியதற்குக் காரணம் யாது? அதன் பயன் என்ன? நாயகி என்ன காரணம் கூறி ஊடிக்கொண்டாள்? [1319]

10. நினைத்திருந்து என்ன செய்தான்? அப்படி செய்ததற்கும் அவள் ஏன் ஊடிக்கொண்டாள்? 'நோக்கினீர்' என்று அவள் கூறியதன் குறிப்பு என்ன? [1320]

## 133. ஊடல் உவகை

ஊடலினால் கூடலின்பம் சிறந்திருந்ததால் அத்தகைய ஊடலினை நாயகனும் நாயகியும் உவந்து மகிழ்தலாகும்.

1. நாயகனிடம் தவறு இருந்ததா? ஊடுதலின் நோக்கம் என்ன? அவள் எதிர்பார்ப்பது என்ன? அவர் அளிக்க வேண்டுமென்று விரும்புவது யாது? [1321]

2. ஊடலினால் சிறிய துன்பம் தோன்றிவிடுமோ? இருந்தாலும் நன்மைதான் என்று கூறக் காரணம் யாது? 'பாடு பெறும்' என்று குறிக்கப்பட்டதன் கருத்தென்ன? [1322]

3. எந்த இன்பம் சிறந்தது? நிலத்தொடு நீர் கலந்தது போன்ற மனம் யாருக்குண்டு? புலத்தலினால் உண்டாகும் இன்பம் எத்தன்மையானது? [1323]

4. எது படை என்று சொல்லப்படுகிறது? புல்லிக் கொண்டு விடாததற்கு எது காரணம்? புலவியின் கண்ணே உண்டாவது எதுவென்று கூறப்படுகிறது? [1324]

5. காதலரிடம் தவறு உண்டோ? இல்லாவிட்டாலும் ஊடல் செய்வது எதற்கு? 'ஒன்று உடைத்து' என்று குறிப்பதன் நோக்கம் என்ன? [1325]

6. காமத்திற்கு எது இன்பம் பயக்கிறது. உண்ணல் என்பது ஏன் கூறப்பட்டது? ஊடல் எதற்குச் சமமாக உவமை காட்டப்பட்டது? [1326]

7. தோற்றவர் யார்? எப்போது தோற்றார்? வென்றவர் யார்? எப்போது வென்றார்? வெற்றி எப்போது காணப்படுகிறது? [1327]

8. 'உப்பு' என்பதன் பொருள் என்ன? கூடலில் நுதல் எவ்வாறாயிற்று? மறுமுறையும் அவள் ஊடிக்கொள்ள வேண்டுமென்று ஏன் விரும்புகின்றான்? [1328]

9. 'ஊடுக' என்று அவன் கூறுவது ஏன்? இரவுப் பொழுது எப்படி இருக்க வேண்டுமென்று விரும்புகின்றான்? அவன் என்ன செய்ய ஆசைப்படுகிறான்? [1329]

10. காமத்திற்கு இன்பமாக அமைவது எது? அந்த ஊடுதலுக்கு இன்பமாக இருப்பது எது? 'பெறின்' என்று குறிப்பிட்டதால் அறிந்து கொள்ள வேண்டிய உண்மை என்ன? [1330]

காமத்துப்பால் இருநூற்று ஐம்பது குறட்பாக்களுக்கும் தெளிவும் நுணுக்கமும் விளங்குமாறு வினாக்கள் அமைக்கப் பட்டுள்ளன. அந்த வினாக்களுக்கு விளக்கம் தரும் வகையில் குறட்பாக்களும் பொழிப்புரை அமைப்பும் தொடர்ச்சியாக கூறப்பட்டுள்ளன.

சிந்தனைக்குரிய செய்திகள் பலவற்றையும் ஊன்றிப் படித்து ஆசிரியர் திருவள்ளுவனார் தந்துள்ள நுட்பமான கருத்துக்களை மனதிற் கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

# விளக்கவுரை விளக்கம்

## களவியல்

## 109. தகை அணங்கு உறுத்தல்

1. [தான் இதற்குமுன் கண்டறிந்திராத உருவத் தோற்றத்துடன் இருக்கும் அப்பெண்ணைப் பார்த்து அவன் ஐயப்பட்டுக் கூறியது.]

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. [1081]

கனத்த காதணிகளைக் கொண்ட இப்பெண் சிறப்பாக ஆராய்ந்து படைக்கப்பட்ட ஒரு மயிலோ? அல்லது இச் சோலையின்கண் இருக்கும் தெய்வமகளோ? அல்லது ஒரு மானிட மகளோ? என்னுடைய மனம் மயங்குகின்றது.

2. [இவள் மானிடப் பெண்தான் என்று தெளிந்து புரிந்து கொண்ட அவன், அவள் அவனைப் பார்த்த பார்வையால் உண்டான வருத்தத்தினைக் கூறுகின்றான்.]

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. [1082]

இவ்வளவு அழகுடைய பெண் என் பார்வைக்கு எதிரே நோக்கினாள். அந்த நோக்கு (பார்வை) தானே தாக்குதல் செய்து வருத்துகின்ற ஒரு தெய்வமகள் மேலும் தாக்குதற்கு ஒரு சேனையையும் கொண்டுவந்தது போன்ற தன்மையை உடையதாயிற்று.

3. [இக்குறட்பாவும் அவளுடைய பார்வையால் அவன் அடைந்த வருத்தத்தினைக் கூறுகிறது.]

பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனியறிந்தேன்
பெண்தகையான் பேரமர்க் கட்டு. [1083]

கூற்றுவன் (எமன்) என்று உலகோர் சொல்லுவதை முன்பெல்லாம் கேட்டறிந்தேனே யல்லாமல் நேரில் கண்டறிந்ததில்லை. இப்போது கூற்றுவனைக் கண்டு கொண்டேன். பெண் தன்மையோடு கூடி பெரியவைகளாகப் போர் செய்கின்ற கண்களே அந்தக் கூற்றுவன் என அறிந்தேன்.

4. [இக்குறட்பாவும் முந்தியது போன்றதாகும்.]

***கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தான் பெண்தகை***
***பேதைக்கு அமர்த்தன கண்.*** (1084)

பெண்மைக் குணங்களுடைய இப்பேதைக்கு (பெண்ணுக்கு) இருக்கின்ற கண்கள் தம்மைக் கண்டவர்களுடைய உயிரை உண்ணும் தோற்றத்துடனே மாறுபட்டிருந்தன. கண்களுக்குப் பெண்மைக் குணமும் இருக்கின்றது—கூற்றுவன் குணமும் இருக்கின்றது!

5. [இதுவும் அது]

***கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்***
***நோக்கம்இம் மூன்றும் உடைத்து.*** [1085]

இப்பெண்ணின் பார்வை என்னை வருத்தலால் கூற்றமோ? என்னைப் பார்ப்பதனாலே கண்கள்தானோ? இயல்பாக அஞ்சும் தோற்றம் தென்படுதலாலே மானோ? யாதென்று அறிய முடியாதவனானேன். இம்மாதின் கண்களுடைய பார்வையானது, இந்த மூன்று வகையான தன்மைகளையும் உடையதாக இருக்கின்றது.

6. [இதுவும் அது]

***கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்***
***செய்யல மன்இவள் கண்.*** [1086]

கொடுமையான புருவங்கள், தாம் வளையாமலிருந்து செம்மையாக அமைந்து கண்களை மறைத்தால், இவளுடைய இக்கண்கள் நடுங்குதற்குக் காரணமான துன்பத்தினை எனக்குச் செய்யாமலிருக்கும். நண்பனாய கண்களுக்குப் புத்தி சொல்லாத புருவங்கள் என்று கூறப்பட்டது.

7. [அவளுடைய முலைகளினாலாய வருத்தம் கூறப்பட்டது]

*கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்*
*படாஅ முலைமேல் துகில்.* [1087]

இப்பெண்ணினுடைய சாய்தலில்லாத முலைகளின் மீது அணியப்பட்டுள்ள ஆடையானது, கொல்லுவதாகிய மதங் கொண்ட யானையின் முகத்தின் மீது போடப்பட்டிருக்கும் துணியினை ஒத்திருக்கின்றது. கண்ணை மறைத்தலால் 'கட் படாம்' என்றான்.

8. [நுதலினால் (நெற்றியினால்) உண்டான வருத்தம் கூறப் பட்டது.]

*ஒண்நுதற்கு ஓஓ உடைந்ததே ஞாட்பினுள்*
*நண்ணாரும் உட்குமென் பீடு.* [1088]

போர்க்களத்தில் எதிரில் வந்து நின்று எதிர்க்கமுடியாத பகைவர்களும், எதிர்த்தோடிய பகைவர்கள் சொல்லியதைக் கேட்டு அஞ்சுவதற்குக் காரணமான என்னுடைய வலிமை யெல்லாம், இம்மாதின் ஒளி வீசும் நெற்றியின் அழகு ஒன் றுக்கே உடைந்து அழிந்து விட்டதே.

9. [அப்பெண் அணிந்திருந்த ஆபரணங்களால் உண்டான வருத்தம் கூறப்பட்டது.]

*பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு*
*அணிஎவனோ ஏதில தந்து.* [1089]

வெளித் தோற்றத்திற்குப் பெண் மான் போன்று அச்ச முறுகின்ற பார்வையும், உள்ளத்திலே நாணத்தினையும் உடைய இப்பெண்ணுக்கு, அவைகளே அணிகலன்களாக இருக்க, வேறுபாடுடைய அணிகளை அணிந்திருக்கச் செய் தல் என்ன பயனை உடையதாகும்?

10. [அப்பெண்ணின் குறிப்பினை அறிந்து கொண்ட அவன் சொன்னது.]

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. [1090]

காய்ச்சப்பட்ட மது தன்னை உண்டவர்களைத்தான் மகிழச்செய்யும். அப்படியல்லாமல் காமத்தினைப் போல தன்னைக் கண்டவரிடத்தில், மகிழ்ச்சியினை உண்டாக்குதல் அந்த மதுவுக்கு இல்லை.

## 110. குறிப்பு அறிதல்

1. [காதலன் அப்பெண்ணினுடைய உள்ளக் கருத்தின் குறிப்பினை அவள் பார்வையினால் அறிந்துகொண்டது.]

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. [1091]

இப்பெண்ணினுடைய மை தீட்டப்பெற்ற கண்களில் இருக்கின்ற நோக்கானது, இரண்டு நோக்குகளாக உள்ளன வாகும். அவைகளில் ஒரு பார்வையானது எனக்கு இக்காம நோயினை உண்டாக்கும் பார்வையாயிற்று. மற்றொரு பார்வையானது, அந்த நோய்க்கு (நோய் தீர) மருந்தாக அமைந்தது.

2. [இதுவும் அது]

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தின்
செம்பாகம் அன்று பெரிது. [1092]

இப்பெண்ணினுடைய கண்கள் நான் பார்க்காமல் களவு செய்து பார்க்கின்ற சிறிய பார்வை, உடம்பு ஒன்று பட்ட புணர்ச்சியில் ஒத்த பாதியளவு என்று சொல்லுதற் கில்லை; அதனினும் மிகுந்த அளவினதாகும்.

3. [நோக்கினாலும் நாணத்தினாலும் அறிந்து கொள்ளப் பட்டது.]

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதுஅவள்
யாப்பினுள் அட்டிய நீர். [1093]

அந்தப் பெண் நான் அவளைப் பார்க்காதிருந்தபோது என்னை அன்போடு பார்த்தாள். பார்த்தபிறகு ஏதோ ஒன்றினை மனதில் நினைத்து நாணத்துடன் தலை குனிந்தாள். இப்படியான செயல்களுக்குக் காரணமான குறிப்பானது, எங்கள் இருவரிடத்திலேயும் உண்டாகியுள்ள காதலாகிய பயிர் வளர்வதற்கு வார்க்கப்பட்ட தண்ணீராயிற்று.

4. [அவளுடைய நாணத்தினாலும் மகிழ்ச்சியினாலும் அவன் அறிந்து கொண்டது.]

யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். [1094]

அம்மாதினை நான் பார்க்கின்றபோது அவள் நாணத்தால் தலை குனிந்து பூமியைப் பார்க்கின்றாள். அதைப் புரிந்து கொண்டு நான் பார்க்காமல் இருக்கின்றபோது, அவள் என்னைப் பார்த்து தனக்குள்ளே மகிழ்கின்றாள், 'மெல்லநகுதல்' என்பது, வெளிப்புறத்தில் தெரியாதபடி மகிழ்தல்.

5. [முந்திய குறட்பாவில் கூறப்பட்டது போன்றதாகும்.]

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். [1095]

நேராகக் குறிப்பினைக் கொண்டு — நேர்முகமாகப் — பாராமை மாத்திரமே அல்லாமல், ஒரு கண்ணைச் சுருக்கிக் கொண்டவள் போல என்னைப் பார்த்துத் தன்னுள்ளே மகிழ்ந்து கொண்டு நின்றாள்.

6. [''இங்கு வரக் கூடாது'' என்று தோழி கூறியபோது, அவள் குறிப்பறிந்து காதலன் தன்னுள்ளே சொல்லிக் கொண்டது.]

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும். [1096]

வெளிப்பார்வைக்கு அந்நியர் போல கடுமையான வார்த்தைகளைச் சொன்னாலும், மனத்தினுள்ளே பகைமையில்லாதவர்களுடைய சொற்கள்—அவைகளால் நன்மையே உண்டாகும்—என்று அறிந்து கொள்ளப்படும். பின்னால் நன்மை பயக்கும் சொற்கள் என்பது உணர்த்தப்பட்டதாகும்.

7. [இதுவும் அது]

*செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்*
*உறாஅர்போன்று உற்றார் குறிப்பு.* [1097]

பின்னர் இன்பம் பயக்கப்போவதாகவும், முன்னே துன்பம் தருவது போன்றதான சொல்லும், உள்ளத்தினுள்ளே சிறிதளவும் பகைமையே யில்லாமல், வெளிக்கு மட்டும் பகைத்துக் கொண்டவர் போன்ற கோபமான பார்வையும், அந்நியர்கள் போல இருந்து பிறகு காதல்—நண்பர்களானவர்கட்கு ஒரு குறிப்பான காரணம் பற்றி வருவனவாகும்.

8. [காதலனாகிய தன்னை நோக்கி மகிழ்ந்த காதலியைக் கண்டு அக்காதலன் கூறியது.]

*அசையியற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்*
*பசையினள் பைய நகும்.* [1098]

என்னை, வாராதே என்று நீக்குகின்ற சொல்லுக்கு, தாங்க முடியாமல் இரக்கத்துடன் நான் நோக்கியபோது, அதனை அப்பெண் தெரிந்து கொண்டு, இரக்கமுற்றவளாகி மனதிற்குள்ளே சிரித்துக் கொண்டாள். அதனால் அசைந்த சாயலழகு நிறைந்த அப்பெண்ணிடத்தில் நன்மைக் குறிப்பு ஒன்று இருக்கின்றது.

9. [தோழி உண்மையறிந்து தன்னுள்ளே கூறியது.]

*ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்*
*காதலார் கண்ணே உள.* [1099]

முன்னர் அறியாதவர் போல (காதலர்கள்) ஒருவரை யொருவர் பொதுப் பார்வைகளால் பார்த்துக் கொள்ளுதல் காதலையுடையவர்களிடத்தில் இருப்பதாகும். வெளிப்புறத்தில் தோன்றுததால் 'ஏதிலார்' என்று கூறினர்.

10. [இதுவும் அது.]

கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல. [1100]

காதலர்களாகிய இருவருள் ஒருவருடைய கண்களுடனே மற்றவருடைய கண்கள் பார்வைகளால் ஒத்திருந்து விடுமேயானால், அவர்கள் உண்மை தோன்றுமாறு பேசுகின்ற வாய்ச்சொற்கள் ஒரு பயனும் உடையன வல்ல என்பதாகும்.

## 111. புணர்ச்சி மகிழ்தல்

1. [இயற்கைப் புணர்ச்சி முடிந்து இறுதியில் அவன் சொல்லியது.]

கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள. [1101]

கண்களால் கண்டும், காதால் கேட்டும், நாவினால் உண்டும், மூக்கினால் மோந்தும், உடம்பால் தொட்டும் அனுபவிக்கப்படுகின்ற ஐந்து புலன்களும் ஒளி பொருந்திய வளையல்களையுடைய இம்மாதிடத்தில் உள்ளனவாகும்.

2. [இரண்டாந்தடவை முன் கூடியவிடத்தில் காதலன் காதலியைக் குறித்துக் கூறியது.]

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. [1102]

நோய்களுக்கு மருந்து என்பவை அந்த நோய்களுக்குப் பகைமையான குணம் உடையனவாகும். அந்த முறையில் இல்லாமல் அணிகலன்களுடனே இந்தப் பெண்ணானவள்

தன்னால் உண்டாக்கப்பட்ட நோய்க்குத்தானே மருந்தாகவும் இருந்தாள்.

3. [நிலையான இன்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்காக இவ்வாறு ஆகுதல் தகாதென்ற தோழர்கட்கு அவன் கூறியது.]

*தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்*
*தாமரைக் கண்ணான் உலகு.* [1103]

தாம் காதலிக்கின்ற மகளிரது மென்மையான தோள்களின் மேல் தூங்குகின்ற இன்பத் துயிலினைப் போல், 'வைகுந்தம்' எனப்படும் தாமரைக் கண்ணனுடைய உலகம் வருந்தாமல் அடையக்கூடியதொன்றுமோ?

4. [தோழர்கள் கூட்டத்து இறுதிக்கண் அவன் சொன்னது.]

*நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்*
*தீயாண்டுப் பெற்றாள் இவள்.* [1104]

அப்பெண்ணை விட்டு நீங்கியபோது சுடுகின்றது. நெருங்கியபோது குளிர்ச்சி தருவதாக இருக்கின்றது. இப்படிப்பட்டதொரு தீயினை எந்த உலகத்தில் இப்பெண் பெற்றாள்.

5. [தோழியர் கூட்டத்தின் இறுதிக்கண் கூறியது.]

*வேட்ட பொழுதின் அவையவை போலுமே*
*தோட்டார் கதுப்பினாள் தோள்.* [1105]

இவளுடன் கூடுகின்ற போதெல்லாம், மலர்கள் நிறைந்திருக்கின்ற கூந்தலையுடைய இப்பெண்ணின் தோள்கள், மிக மிக இனிமை தருகின்ற பொருள்களை அடைவதற்கு ஆசைபட்டபோது அந்தந்தப் பொருள்கள் போல வந்து இன்பத்தினைத் தருவனவாகும்.

6. [இதுவும் அது]

*உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலான் பேதைக்கு*
*அமிழ்தின் இயன்றன தோள்.* ]1106]

காதலியைப் பெறுமல் துன்பமடைந்து கொண்டிருந்த உயிரானது, இவளைப் பெற்றுத் தளிர்ந்து மகிழ்ந்தின்புறு மாறு தீண்டுதலினுலே, இந்தப் பேதைப் பெண்ணுக்குத் தோள்களானவை அமிழ்தத்தினுலே செய்யப்பட்டிருப்பன வாகும்.

7. [இப்பெண்ணை, நீ திருமணம் செய்து கொண்டு இல்லத்தில் இல்லறம் செய்து பகுத்துண்ணும் பான்மையுடன் வாழ வேண்டும் என்ற தோழிக்கு அக்காதலன் கூறியது.]

தம்இல் இருந்து தமதுபாத்து உண்டற்றுல்
அம்மா அரிவை முயக்கு. [1107]

அழகு நிறைந்து பொன்னிறமான இம்மாதுடைய புணர்ச்சியானது, தமக்குரிய இல்லத்திலிருந்து தம்முடைய உழைப்பினுல்—முயற்சியினுல் வந்த பொருளைப் பலருக்கும் பகுத்துக் கொடுத்துத் தாமும் உண்டது போல இருக்கிறது என்றுன்.

8. [ஒரு பொழுதும் விடாத முயக்கமே—தழுவுதலே இனிதாகலான் திருமணம் கூறிய தோழிக்குச் சொன்னது.]

வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. [1108]

ஒரு பொழுதும் நெகிழாமையினுல், காற்று இடையே போக முடியாததான முயக்கு (தழுவுதல்) காதலர்கள் இருவர்க்கும் மிகுந்த இன்பம் பயப்பதாகும்.

9. [இவ்வாறு மறைந்து நடத்தும் களவு வாழ்க்கை நீங்கி திருமணம் நல்லது என்பவளுக்குக் கூறியது.]

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். [1109]

நாயகன் நாயகிமார்களிடத்தில் உண்டாகும் ஊடலும், அதனை உணர்ந்து அளவறிந்து நீங்குதலும், அதன்பின் நிகழ்கின்ற புணர்ச்சியும் என்கின்ற இவைகள் தானே திருமணம் செய்துகொண்டு காமத்தினை இடைவிடாமல் நுகர்ந்தவர்கள் பெற்ற பயன்கள் என்று கூறினான்.

10. [புணர்ந்தபின் பிரிந்து போகின்றவன் தனக்குள்ளே சொன்னது.]

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. [1110]

இன்பத்திலை் புணரப் புணர செம்மையான அணிகலனுடைய இப்பெண்ணிடத்தில், காம இன்பம், கற்றறிந்த நூல்களாலும், நுட்பமான அறிவாலும், உலகியல் பொருள்களை ஆராய்ந்து அறிய அறிய முன்பிருந்த அறியாத்தன்மை காணப்படுவதைப் போல காணப்படுகின்றது. காதலன் இவ்வாறு கூறினான்.

## 112. நலம் புனைந்து உரைத்தல்

1. [இயற்கைப் புணர்ச்சி முடிந்து இறுதியில் காதலன் கூறியது.]

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். [1111]

அனிச்ச மலரே! நீ வாழ்வாயாக; மென்மைத்தன்மை உடைமையினால் மற்ற பூக்களையெல்லாம்விட சிறந்த தன்மை உனக்குண்டு; அவ்வாறே இருந்தாலும், என்னுடைய விருப்பமான காதலியானவள் உன்னை விட மெல்லிய குணம் உடையவளாகும்.

2. [இயற்கைப் புணர்ச்சி நீங்கி இடையில்—மறு முறை அவளைக் காணும் வரை—கண்ட பூக்களை இகழ்ந்தான்—இது மீண்டும் அவளைக் காணும்போது கூறியது.]

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. [1112]

நெஞ்சமே! இந்தப் பெண்ணின் கண்களை, பலராலும் காணப்படுகின்ற மலர்களை ஒத்திருக்கும் என்பதாக எண்ணி பலவகைப்பட்ட மலர்களைக் காணும்போதெல்லாம் மயக்க முற்று—மயங்கி—நிற்கின்றாயே! என்னே பேதைமை! காதலியின் கண்கள் அவன் ஒருவனால் மட்டும்தான் பார்க்கமுடியும் என்றான்.

3. [காதலன் காதலியின் அரிய இயல்புத் தன்மையினைக் கூறினான்.]

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு. [1113]

மூங்கில் போலும் தோள்களையுடைய அப்பெண்ணின் உடம்பு நிறம் தளிர் நிறமாக இருக்கும்; பற்கள் முத்துக்களாக இருக்கும்: இயற்கை மணமானது நல்ல மணமாக இருக்கும்; மை தீட்டப்பெற்ற அவளுடைய கண்கள் வேல்களாக யிருக்கும்.

4. [குவளை மலரும் அவளுடைய கண்களும்.]

காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாண்இழை கண்ஒவ்வேம் என்று. [1114]

குவளை மலர்கள் பார்க்கின்ற தன்மையான குணம் பெற்றிருந்தால், சிறப்புயர்வு கொண்ட அணிகலன்களை யுடைய இப்பெண்ணின், கண்களை ஒத்திருக்க மாட்டோம் என்று நினைத்து தலை குனிந்து பூமியைப் பார்த்துக்கொண்டிருப்பனவாகும்.

5. [பகலில் அவளுடைய பூ அணி கண்டு அவன் கூறியது.]

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. [1115]

என்னுடைய காதலியாகிய இப்பெண் அனிச்சப்பூக்களை காம்புகளை எடுக்காமல் சூடிக் கொண்டாள். ஆதலால், இவள் இடைக்கு நல்ல நேரத்தில் ஒலிக்கின்ற பறைகள் ஒலிக்காது. பாரம் தாங்க முடியாமல் இடுப்பு முரியும்; அதனால் இறந்துவிடுவாள் என்பதாகும்.

6. [இரவில் மதியை (சந்திரன்)க் கண்டு அவன் கூறியது.]

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன். [1116]

விண்மீன்கள் (நட்சத்திரங்கள்) தமது தலைவனாகிய சந்திரனையும், என்னுடைய காதலியின் முகத்தையும் (எது சந்திரன் எது முகம்) என்ற வேறுபாடு அறியாமல் தங்கள் இடத்தினின்றும் கலங்கித் திரிந்து கொண்டிருப்பனவாகும்.

7. [இதுவும் அது.]

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து. [1117]

அந்த விண்மீன்கள் வேறுபாடு தெரியாமல் திரிவது அறியாமையாகும். ஏனெனில், குறைந்து நிறைகின்ற குணம் இப்பெண்ணுக்கு இல்லையே! முன்பு குறைந்திருந்த இடம் பிறகு நிறைந்த, ஒளி விடுகின்ற சந்திரனிடத்தில் இருப்பதைப் போல, இப்பெண்ணின் முகத்தில் களங்கமானது இருக்கின்றதோ?

8. [இதுவும் சந்திரனைக் குறித்ததே யாகும்.]

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. [1118]

மதியே! நீ வாழ்வாயாக! மகளிரின் முகங்களைப் போல ஒளி வீசுகின்ற தன்மை—குணத்தினை நீ பெற்றிருப்பாயானால், நீயும் என்னால் விரும்பப்படுவாய், என்பதாம்.

9. [மதி பலர் காணத் தோன்றக் கூடாது!]

மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்
பலர்காணத் தோன்றல் மதி. [1119]

மதியே! மலர் போலும் கண்களையுடைய இப்பெண்ணின் முகத்தினை ஒத்திருக்க வேண்டுமென்று எண்ணுவாயானால், நான் மட்டும் பார்ப்பதற்குத் தோன்றுவாயாக; பலராலும் காணப்படுமாறு தோன்றாதே.

10. [காதலனும் காதலியுமாகச் சென்று விடுங்கள்—என்று 'உடன் போக்கு' கூறிய தோழிக்குக் காதலியின் அருமை கூறியவாறு.]

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். [1120]

மென்மைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுகின்ற அனிச்சப் பூவும், அன்னப் பறவையின் மிகமிக மென்மையான இறகும் இம்மாதின் அடிகளுக்கு (பாதங்கட்கு) நெருஞ்சிப்பழம் போல கொடிய துன்பத்தினைக் கொடுக்கும்.

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

1. [இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் காதலன் தன் நயப்பு உணர்த்தியது.]

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர். [1121]

மென்மையான சொற்களையுடைய இப்பெண்ணினுடைய வெண்மையான பற்களில் ஊறிய நீர் பாலுடனே தேனைக் கலந்த கலவை போல் இருக்கின்றது.

2. [பிரிகின்ற அச்சம் கருதி கூறியது.]

உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. [1122]

இப்பெண்ணுடனே எமக்கு உண்டாகியுள்ள அன்பு உடம்புடன் உயிரிடத்து உள்ள நட்பு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதாகும். இருவரும் பிரிந்து தனித்திருந்து வாழ முடியாதவர்களாகும்.

3. [இடந்தலைப் பாட்டின்கண்—அதாவது காதலியை விட்டு நீங்கியிருந்தபோது அவன் கூறியது.]

கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். [1123]

என் கண்ணின் கருமணியில் இருக்கின்ற பாவையே! அந்த இடத்தை விட்டுப் போவாயாக; போகாதிருந்தால், நான் விரும்பிக் காதலிக்கின்ற அழகிய நெற்றியினையுடைய காதலி வந்து இருக்க இடம் இல்லை; (கருமணியின் பாவை போய்விட்டால் பார்வை இழப்போம் என்பதைக் காதலன் கருதவில்லை.)

4. [பகற்குறிக்கண் புணர்ந்து நீங்கும் காதலன் கூறியது.]

வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கு மிடத்து. [1124]

ஆராய்ந்து அணிந்துகொண்டிருக்கின்ற அணிகலன்களைக் கொண்ட இப்பெண்ணானவள், அவள் புணர்ந்திருக்கும்போது உயிருக்கு உடம்புடன் கூடி வாழ்ந்துகொண்டிருப்பது போல இருக்கின்றாள். அவளை விட்டுப் பிரியும் போது அந்த உயிர்க்கு உடம்பிலிருந்து நீங்கிப் போவது போலாகின்றாள்.

5. [யாதேனும் காரணம் குறித்துப் பிரிந்து போன காதலன் திரும்பி வந்தபோது, 'எம்மை மறந்தீரோ' என்று கேட்ட தோழிக்குக் கூறினான்.]

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்

நான், ஒளி நிறைந்தனவாயும் போர் செய்வனவாயும் உள்ள கண்களையுடைய காதலியினுடைய குணங்களை மறந்திருந்தால் நினைத்துப் பார்ப்பேன். ஒருபோதும் மறந்திருந்ததில்லை. ஆதலால் நினைத்தலும் அறியேன், என்ருன்.

6. [பிரிந்திருக்கும் காதலனைப் பிரிந்திருப்பதால் தோழி பழித்துக் கூறுவாள் என்று கருதி, காதலி அவள் கேட்பத் தனக்குள்ளே கூறியது.]

கண்ணுள்ளில் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர். [1126]

எம்முடைய காதலர் கண்ணுள்ளிருந்து போகமாட்டார். அறியாமல் கண்களை நான் இமைத்து விட்டால் அதனுல் வருத்தப்படவுமாட்டார். ஆதலால் வெளியில் காணப்படார். அவ்வாறு காணப்படாத நுண்ணியர், (காதலன் சிறப்பினைக் காதலி இவ்வாறு வெளிப்படுத்தினுள்.)

7. [காதலன் அருமையினை மீண்டும் கூறுகிருள்.]

கண்ணுள்ளார் காதலவ ராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து. [1127]

எம்மீது நிறைந்த ஆசையுள்ள காதலர் எம்முடைய கண்ணுள் எப்போதும் இருக்கின்ருரானபடியால், கண்களை மையினால் எழுத மாட்டோம். ஏனென்ருல் மையிடுகின்ற அந்த நேரம் வரை அவர் மறைந்திருக்க வேண்டியிருக்கும்; மையிடுதல் அவரை மறைக்கும் என்பதாம்.

8. [நெஞ்சிலேயே என்றும் காதலர் உள்ளார்.]

நெஞ்சத்தார் காதலவராக வெய்துஉண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. [1128]

எம்முடைய காதலர் எப்போதும் நெஞ்சிலேயே இருந்துகொண்டிருக்கின்ருர் ஆனபடியால், உணவு உண்ணும் போது சூடு உள்ளதான உணவினை உண்ணுதற்கு அஞ்சுகின்ரேம். ஏனெனில் சூடுபட்டு அவர் துன்புறுவார் என்ப

தற்காக—என்பதாம். அதாவது காதலர் அக்காதலியைப் பிரிந்திருப்பதே இல்லையாம்.

9. [திருமணம் செய்துகொள்ள பொருளீட்ட வெளியூர் சென்றிருக்கும் காதலரை—அவளை விட்டுப் பிரிந்துவிட்டார் என்று குறை கூறுவோர்க்கு அவள் கூறியது.]

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் ஊர். [1129]

என்னுடைய கண்கள் இமைத்தலைச் செய்யுமாயின் கண்ணுள் இருக்கும் காதலர் மறைந்து விடுவார். அதனால் நான் கண்ணிமைக்காமல் விழித்துக் கொண்டே இருக்கின்றேன். இந்த அளவுக்கே இவ்வூரார், என்னுடைய காதலர் அன்பில்லாதவரென்றும், எனக்குத் தூங்காத நோய் செய்தார் என்றும் கூறுகிறார்கள்.

10. [ஊரார் சொல்லுக்குப் பதில் கூறுகிறாள்.]

உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துஉறைவர்
ஏதிலர் என்னும்இவ் ஊர். [1130]

என்னுடைய காதலர் எப்போதும் என்னுடைய மனதிற்குள் மகிழ்ந்து இருந்துகொண்டிருக்கின்றார். அதைத் தெரிந்து கொள்ள முடியாத இந்த ஊர் மக்கள் என்னுடைய காதலர், பிரிந்திருக்கின்றார், அன்பில்லாதவர் என்று கூறுகிறார்கள்.

## 114. நாணுத்துறவு உரைத்தல்

1. [காதலன் காதலியைச் சந்திக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. காதலிக்கும் அவ்வாறே யாகும். காதலன் கூறுகிறான்.]

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல்அல்லது இல்லை வலி. [1131]

இன்பம் நிறைந்த மகளிரோடு காமத்தினைச் சுவைத்து அனுபவித்து, பிறகு அந்த இன்பம் பெருமல் துன்பம் அடைகின்ற காதலர்கட்கு மடன்மா ஏறுதல் என்ற பாதுகாப்பான வழியை விட வேறு வலியது இல்லையாகும். (பனை ஓலையாலே செய்யப்பட்ட குதிரை மீது அமர்ந்து ஊரார் அறியச் செய்வதே—மடல்—என்று கூறினுன்.)

2. [நாணம் உடைய நுமக்கு அவ்வாறு செய்தல் தகாது என்ற தோழிக்குக் கூறியது.]

நோனு உடம்பும் உயிரும் மடல்ஏறும்
நாணினை நீக்கி நிறுத்து. [1132]

மடன்மா ஏறுதல் நாணமுடையவர்க்கு ஆகாது. நாணத்தினை விலக்கி—நீக்கிவிட்டு, பிரிந்திருக்கும் வருத்தத்தினைத் தாங்கிக்கொள்ள முடியாத உடம்பும் உயிரும் அவைகட்குக் காப்பான மடன்மா ஏறுதலை நினைத்துக்கொண்டிருக்கின்றன.

3. [நாணமே யன்றி நல்லாண்மை உடையவர்க்கு முடியாது என்ருட்குக் கூறியது.]

நாணெடு நல்லாண்மை பண்டுஉடையேன்
இன்றுஉடையேன்
காமுற்ருர் ஏறும் மடல். [1133]

நாணத்தினையும் மிகுந்த ஆண்மைத் தன்மையினையும் முன்னே உடையவனுக இருந்தேன். அவை காமத்தால் நீக்கப்பட்டு விட்டன. இப்போது மடலேறுதலை உடையவனுக இருக்கின்றேன்.

4. [காம வெள்ளம் இழுத்துக்கொண்டு போயிற்று.]

காமக் கடும்புனல் உய்க்குமே நாணெடு
நல்லாண்மை என்னும் புணை. [1134]

காம வேதனையைக் கடந்து செல்ல—புணையாக—தெப்பமாகக் கொண்டிருந்த நாணம்—நல்லாண்மை என்ற இரண்

டிீனயும் காமம் எனப்படுகின்ற கொடுமையான வெள்ள மாது என்னிடமிருந்து பிரித்துக்கொண்டு போயிற்று.

5. [இப்படிப்பட்ட துன்பம் உமக்கு எவ்வாறு வந்த தென்ற தோழிக்குக் கூறியது.]

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர். [1135]

மாலைக் காலத்தில் அனுபவிக்கப் பெறுகின்ற இக்காமத் துன்பத்தினையும் அத்துன்பத்தினை நீக்குவதற்காக மடன்மா ஏறுதலையும், மாலை போன்று தொடர்ச்சியாக சிறிய வளையல்களை அணிந்து கொண்டிருக்கின்ற இம்மாது எனக்குத் தந்தாள்.

6. [மடலூர்தலை நள்ளிரவிலும் நினைத்துக் கொண்டிருக் கின்றேன்.]

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்குஎன் கண். [1136]

பேதைப் பெண்ணாகிய என்னுடைய காதலியின் காரணமாக என்னுடைய கண்கள் எப்போதும் தூங்குவதே இல்லை. ஆதலால் அனைவரும் உறங்குகின்ற நள்ளிரவிலும் மடன்மா ஏறுதலையே நினைத்துக்கொண்டு இருப்பவனாகின்றேன்.

7. [மகளிர் போலல்லாமல், ஆண் தன்மை நிறைந்த ஆடவர்கள் பொறுத்திருக்க வேண்டும்—ஆற்றியிருக்க வேண்டும் என்றாட்குக் கூறியது.]

கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல். [1137]

கடல் போன்று கரையில்லாத—எல்லையற்ற—காம நோயினை அனுபவித்தும் மடன்மா ஏறுகின்ற எண்ணமில்லாமல் பொறுமையுடன் இருக்கின்ற பெண் பிறப்பினைப் போல பெருமை நிறைந்த பிறவி வேறு எதுவும் இல்லை.

8. [காவல் மிகுதியாக்கப்பட்டு காமம் பெருகிய நிலையில் காதலி கூறியது.]

நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும். [1138]

இம்மாது நிறை குணச் சிறப்பினால் நாம் மேற்கொள்ளு வதற்கு அருமையானவர் என்று அஞ்சாமலும் மிகவும் அன்பு காட்டப்பட வேண்டியவரென்று இரக்கங்கொள்ளாமலும் காமமானது, நான் மறைத்து வைத்திருப்பதையும் கடந்து பலரறியுமாறு அவையில் வெளிப்படுவதாகின்றது. (இவ்வாறு அக்காதலி கூறுகின்றாள்.)

9. [காமம்—அவள் துன்பம் வீதிகளில் இருப்போர்க்கும் தெரியத் தொடங்கி விட்டது.]

அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்.
மறுகின் மறுகும் மருண்டு. [1139]

'எல்லோரும் என்னை அறிந்திலர்' என்று காமம் நினைத்துக்கொண்டு, 'இனி அடங்காமல் நானே வெளிப்பட்டு அறிவிப்பேன்' என்று நினைத்து, என்னுடைய காமமானது இந்த ஊர் வீதிகளில் மயங்கி சுழன்று அம்பலாக்கிக் கொண்டிருக்கிறது.

10. [காதலி ஊராரின் செயலினைக் குறித்துச் சொன்னது.]

யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. [1140]

யாம் கண்ணிற்காண—கண்ணால் பார்க்கும்படியாக, அறிவில்லாதவர்கள் சிரிக்கின்றார்கள். அவர்கள் அவ்வாறு செய்வதற்குக் காரணம் யாம் அடைந்த இந்தக் காம நோயினை அவர்கள் அனுபவித்திராததே யாகும்.

## 115. அலர் அறிவுறுத்தல்

1. [ஊரார் தங்களிருவரின் காதல் பற்றித் தூற்றிப் பேசுவது நன்மையேயாகும் என்றான்.]

*அலர்எழ ஆர்உயிர் நிற்கும் அதனைப்*
*பலர்அறியார் பாக்கியத் தால்* [1141]

எனக்கும் அம்மாதுக்கும் உண்டாகியுள்ள காதல் நட்பினை ஊரார் தூற்றிப் பேசுகிறார்கள். (அலர்). அதனால் அப்பெண்ணைப் பெறாமல் பிரிக்கப்பட்டிருக்கும்—பிரிந்து வருந்துகின்ற என் ஆருயிர் அவளைப் பெற்றது போல் நிலைத்திருக்கின்றது. அந்த நன்மையினை நல்ல காலத்தால் நானே அறிந்திருக்கின்றேனேயல்லாமல் தூற்றுகின்ற பலரும் அறிந்தாரில்லை.

2. [ஊரார் தூற்றிப் பேசுவதைக் குறித்துக் கூறியது.]

*மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது*
*அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர்.* [1142]

மலர் போன்ற அழகிய கண்களையுடைய, என்னுடைய காதலியின் அருமையினை அறிந்து கொள்ளாமல் இவ்வூர் மக்கள், அப்பெண்ணை எளியவளாகக் கருதி தூற்றுதல் செய்கிறார்கள். அப்படி (அலர்) தூற்றுவது எனக்கு உதவியாக இருக்கின்றது.

3. [அலரால் (தூற்றிப் பேசுவதால்) உண்டான நன்மையினைக் கூறுகின்றான்.]

*உறாஅதோ ஊர்அறிந்த கௌவை அதனைப்*
*பெறாஅது பெற்றன்ன நீர்த்து.* [1143]

காதலர்களாகிய எங்களுக்குள் உண்டான சேர்க்கையினை இவ்வூரார் தெரிந்து கொண்டு தூற்றிப் பேசுவது (அலர்) எனக்கு வேண்டியதொன்று அல்லவா? அவர்கள் பேசுவதைக் கேட்ட என்னுடைய மனமானது புணர்ச்சி பெறாதிருந்தே பெற்றது போன்ற தன்மை உடையதாயிற்று.

4. [ஊரார் தூற்றிப் பேசுகின்ற கவ்வையால் காமம் மிகுவதாகின்றதாம்.]

கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து. [1144]

என்னுடைய காமம் இந்த ஊர் மக்கள் தூற்றிப் பேசுவதால்—மேலும் மேலும் மிகுந்து வளர்வதாயிற்று. அப்படிப் பட்ட அலர் (தூற்றிப் பேசுதல்) இல்லையென்றால் இன்பம் தருகின்ற நிலை இழந்து சுருங்கிப் போவதாகும்.

5. [காமமும் கள்ளும் சேர்த்துக் கூறப்படுகிறது.]

களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது. [1145]

உண்பவர்கட்கு உண்டு மகிழுந்தோறும் கள்ளுண்ணுதல் இனிமையாக இருக்கின்ற தன்மையினைப்போல, எனக்குக் காமமானது ஊரார் தூற்றிப் பேசுவதால் வெளிப்படும் போதெல்லாம் இனிமை தருவதாக இருக்கின்றது.

6. [காதல் ஊரெங்கும் பரவியதைக் குறித்து அக்காதலி கூறினாள்.]

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. [1146]

காதலரை நான் கண்டு மகிழ்ந்தது ஒரு நாளேயாகும். அதனால் இவ்வூரார் எடுக்கும் அலர் (தூற்றிப் பேசுதல்) அந்த அளவு இல்லாமல், சந்திரனைப் பாம்பு பிடித்துக் கொண்ட நிகழ்ச்சி போன்று உலகெங்கும் பரவி விட்டது.

7. [காம நோய் வளர்கின்ற காரணம்.]

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். [1147]

இந்தக் காம நோயாகிய பயிர், இவ்வூரிலிருக்கின்ற பெண்கள் தூற்றிப் பேசுகின்ற—அலரானது—எருவாக, அது கேட்டு மிகவும் கோபித்துத் தன் தாய் பேசுகின்ற கடுஞ் சொல் தண்ணீராக வளர்ந்து வருகிறது. (காதலி கூறியது)

8. [நெய்யால் நெருப்பினை அவித்தல் போன்றது.]

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கெளவையால்
காமம் நுதுப்பேம் எனல். [1148]

ஊரார் தூற்றிப் பேசுதலால் (அலரால்) காமத்தினை அவித்து விடுவோம் என்று எண்ணுதல், நெய்யினைப் பெய்து நெருப்பினை அவிப்போம் என்று கூறுதற்குச் சமமாகும்.

9. [காதலன் பிரிந்திருப்பது கண்டு அவள் வருந்திக் கூறியது.]

அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. [1149]

எம்மைக் கண்ட நாளில் காதலர், 'அஞ்சாதே! உன்னை விட்டுப் பிரியேன் என்ற உறுதி மொழி கூறினார். அப்படிப் பட்டவரே இன்று பலரும் நாணமுறும் வகையில் நம்மை விட்டு நீங்கி இருக்கின்றார். ஆதலால், அன்னியர் தூற்று கின்ற அலருக்கு நாம் நாணமடைவதில் பொருளுண்டோ?

10. [காதலர் இருவரும் பிறர் அறியாமல்—உடன்போக்கு—வெளியூர் செல்லும் சிந்தனை குறிக்கப்பட்டது.]

தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கெளவை எடுக்கும்இவ் ஊர். [1150]

உடன்போக்கிற்கு உதவியாக இருக்கும் கவ்வையினை (தூற்றிப் பேசுதல்) இவ்வூர் தானாகவே எடுக்கின்றது. இனி மேல் நம்முடைய காதலர் நாம் வேண்டி விரும்பினால், தாமும் உடன்போக்கிற்கு உடன்படுவார். ஆதலால் இந்த அலர் நன்மையாய் வந்தது. (காதலி இவ்வாறு கூறினாள்.)

# கற்பியல்

## 116. பிரிவு ஆற்றாமை

1. [பிரிந்து விரைவில் வருவேன் என்ற நாயகனுக்குக் கூறியது.]

*செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.* [1151]

நீங்கள் எம்மை விட்டுப் பிரியாதிருப்பீர்களேயானால் எனக்கு அச்செய்தியினைச் சொல்லுங்கள். அதுவல்லாமல், பிரிந்து போய் விரைவில் வந்து விடுவேன் என்ற செய்தியினை நீங்கள் வரும்போது உயிர் வாழ்ந்திருப்பவர்க்குச் சொல்லுங்கள். (பிரிந்து நாயகி உயிர் வாழ்தல் இயலாதென்பதாம்.)

2. [நாயகன் பிரிவான் என்பதை நாயகி குறிப்பால் உணர்ந்து சொன்னது.]

*இன்கண் உடைத்துஅவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.* [1152]

இப்போது பார்ப்பதற்கு நாயகனுடைய பார்வை நமக்கு இனிமை பயப்பதாகத்தான் இருக்கின்றது. ஆனால் புணர்ச்சி நடந்து கொண்டிருக்கும்போது, அப்புணர்ச்சி பிரிவர் என்று அஞ்சுகிற அச்சத்தினை உடையதாக இருந்தது.

3. [நாயகன் அன்பினைத் தெரிந்தறிதல் இயலாதாயிற்று.]

*அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவுஓர் இடத்துஉண்மை யான்.* [1153]

'பிரியேன்' என்ற சொல்-சொல்லினையும், பிரிதலையும் தாங்கிக் கொள்ளாத நாயகியின் நிலைமையினை அறிந்திருக்கும் காதலரிடத்தும், ஒரு நேரத்தில் உண்டாதலால், அவர் நம்மீது நிறைந்த அன்புடையவராக இருக்கின்றார் என்று தெரிந்து கொள்ள முடியாததாகின்றது.

4. [நாயகி தன்மீது தவறில்லை என்றாள்.]

அளித்துஅஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. [1154]

நாங்கள் சந்தித்த அந்த நாளிலேயே, அன்பு காட்டி 'உன்னை விட்டுப் பிரியேன்' என்று கூறிய அவரே பிரிதல் செய்வாராயின் அவரால் உணர்த்தப்பட்ட சொற்களை உண்மையென்று நம்பிய என் மீது குற்றம் உண்டாக முடியுமோ?

5. [இதுவும் அது.]

ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல் மற்றுஅவர்
நீங்கின் அரிதால் புணர்வு. [1155]

என்னுடைய உயிர் நீங்காமல் காப்பாற்ற நினைப்பாயாயின் அவ்வுயிர்க்கு உரியவரான நாயகர் பிரிந்து செல்லுவதைத் தடுத்து நிறுத்துவாயாக; அப்படித் தடுப்பாரின்றி அவர் பிரிந்து செல்லுவாராயின், என்னுடைய உயிரும் போகும். பிறகு நாயகருடன் கூடுதல் அரிதாகும். (நாயகி தோழியிடம் இவ்வாறு கூறினாள்.)

6. [நாயகன் பிரிவினைக் கூறிய தோழிக்கு நாயகி சொன்னது.]

பிரிவுஉரைக்கும் வன்கண்ண ராயின் அரிதுஅவர்
நல்குவர் என்னும் நசை. [1156]

'பிரிவினைத் தாங்க மாட்டாள் நாயகி' என்ற உண்மையினைத் தெரிந்திருக்கும் நாயகரே, பிரிகின்ற செய்தியினைக் கூறும் அன்பில்லாதவராக ஆன பிறகு, நாம் வருந்துவதை அறிந்து வந்து அன்பு செய்வார் என்ற ஆசை விடப்பட வேண்டியதாகும்.

7. [வளையல்கள் உணர்த்துகின்றன.]

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. [1157]

என்னுடைய தலைவன்—நாயகன் (துறைவன்) என்னைப் பிரிந்து செல்லப் போகின்றார் என்ற செய்தியினை அவர் அறிவிக்காமலேயே, என் முன்கையினின்றும், கழலுகின்ற —வளையல்கள் எனக்கு அறிவிக்காதோ? உடல் மெலிவால் வளையல்கள் கழலும். வருத்தத்தால் உடல் மெலியும்.

8. [மகளிர்க்குத் துன்பம் தருபவை.]

இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. [1158]

மகளிர்க்குத் தங்கள் குறிப்பறிந்து நடக்கின்ற தோழியர்கள் இல்லாத ஊரில் வாழ்தல் துன்பம் தருவதாகும். அதனைவிடத் துன்பம் தருவது, இனிய தம் காதலரைப் பிரிந்திருப்பது என்பதாம்.

9. [காமத் தீயின் தன்மை கூறியவாறு.]

தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ. [1159]

நெருப்பானது தன்னைத் தொட்டால்தான் சுடும் தன்மை கொண்டது. காம நோயினைப் போல, தன்னை விட்டு நீங்கினால் சுடுகின்ற ஆற்றல் அந்த நெருப்புக்கு உண்டோ?

10. [பொறுத்திருக்க இயலாது என்கிறாள் நாயகி.]

அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர். [1160]

நாயகன் பிரிவினைச் சொல்லியபோது அதற்கு இசைவு தந்து உடன்பட்டு, பிரிகின்றபோது உண்டாகின்ற வேதனை யையும் நீக்கி, பிரிந்து சென்ற பிறகு அந்தப் பிரிவினையும் பொறுத்து அதற்குப் பின்னரும் இருந்து உயிர் வாழ்பவர்கள் உலகில் பலர் இருக்கின்றனர்!

## 117. படர் மெலிந்து இரங்கல்

1. [காமநோய் ஊற்று நீர் போல் மிகும்.]

மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். [1161]

நான் இக்காம நோயினைப் பிறர் அறியக்கூடாதென்று மறைக்கின்றேன். மறைத்தாலும், இக்காம நோயோ, நீர் வேண்டுமென்று இறைப்பவர்களுக்கு ஊற்று நீர் போல மிகுந்து கொண்டே போகிறது. (இவ்வாறு நாயகி கூறினாள்.)

2. [மறைக்கவும் முடியவில்லை, உரைக்கவும் முடிய வில்லை.]

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும். [1162]

இந்தக் காம நோயினை இங்குள்ளோர் அறியாமலிருக்க மறைத்து வைத்திருக்க முடியாதவளாகின்றேன். இந்த நோயினை உண்டாக்கிய நாயகருக்குச் சொல்லலாம் என்றாலோ, அப்படிச் சொல்லுவதும் எனக்கு நாணத்தினை உண் டாக்குவதாகும். என்செய்வேன்?

3. [காவடித் தண்டு.]

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து. [1163]

காம நோயும் அதனை வெளிப்புறத்துச் சொல்லவிடாத நாணமும், தம்மைத் தாங்க முடியாத என்னுடைய உடம்பி

னிடத்து, உயிர் காவடித் தண்டாக இரு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருக்கின்றன.

4. [காமக் கடலினைக் கடக்க முடியாதவளானாள்]

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். [1164]

காமக்கடல் இருக்கின்றது. அக்கடலினைக் கடக்கும் புணை, பாதுகாப்பான தெப்பம் எனக்கு இல்லை என்றாள்.

5. [நட்பினுள் துன்பம் செய்பவர் பகைமைக்கண் என் செய்வாரோ.]

துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். [1165]

இன்பம் செய்யக்கூடிய நட்பினிடத்தே துன்பம் வருமாறு செய்யும் வல்லமை பெற்ற காதலர், துன்பம் செய்வதாகிய பகைமைக்கண் என்ன செய்வாரோ?

6. [கடலைவிடப் பெரியது காமத் துன்பம்.]

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதுஅடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது. [1166]

காமம் புணர்ச்சியால் இன்பம் தருகின்றபோது அந்த இன்பம் கடல்போல் பெரிதாக இருக்கின்றது. பிறகு அதே காமம் — அந்தக் காமம் காதலர் இருவர் பிரிந்திருக்கும் போது உண்டாக்குகின்ற துன்பம், அந்தக் கடலினை விடவும் பெரிதாக இருக்கின்றது.

7. [காமக்கடல் நிறைகுணத்தினால் நீந்தப்படும் என்ற தோழிக்கு நாயகி கூறியது.]

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன். [1167]

காமமாகிய கடலினை நீந்தினாலும் அதனுடைய கரையினைக் காண முடியாதவளானேன். பாதி இரவாகிய நள்ளிரவிலும் யானே தனித்து இருக்கின்றேன். இறவாமல் உயிருடன் இருந்து கொண்டிருக்கின்றேன்.

8. [இரவின் கொடுமையினைச் சொல்லி இரக்கப்பட்டது.]

மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்துஇரா
என்னலல்லது இல்லை துணை. [1168]

இந்த இரவுப்பொழுது அன்புடையதாக இருக்கின்றது. உலகில் நிலைபெற்றுள்ள உயிரினங்களை யெல்லாம் துயிலச் செய்துவிட்டது. பிறகு விழித்துக்கொண்டே இருக்கின்ற என்னைவிட இந்த இரவுக்கு வேறு துணை இல்லை என்பதாம். (இவ்வாறு நாயகி பேசினாள்.)

9. [இரவின் கொடுமை கூறியவாறு.]

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா. [1169]

நாயகன் பிரிவினைப் பொறுக்க முடியாத இந்த நாட்களிலே நீண்ட நேரமாக இருந்து கழிகின்ற இரவுப்பொழுதுகள் (இரவுகள்) பிரிந்த நாயகரின்—கொடியவரது—கொடுமைக்கு மேலே அதிகமாகக் கொடுமை செய்கின்றன.

10. [அவளுடைய கண்களின் நிலை.]

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். [1170]

என்னுடைய மனத்தினைப்போல நாயகன் இருக்கின்ற நாட்டிற்கு விரைவில் கடிந்து செல்லக் கூடியவைகளானால், என்னுடைய கண்கள் வெள்ளமாகிய நீரை நீந்த வேண்டிய இந்த நிலைமை உண்டாகாது.

## 118. கண் விதுப்பு அழிதல்

1. [இந்த நோய் எப்படி அவளுக்கு வந்தது.]

கண்தாம் கலுழ்வது எவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது. [1171]

தீராத இக்காம நோயினை நாம் அறிந்தது எவ்வாறு? தாம் (கண்கள்) காதலரைக் காட்டியதாலன்றோ! அன்றைய தினம் அவைகள் (கண்கள்) செய்து, இன்று காதலரைக் காட்டச் சொல்லி அழுகின்றன; எதை நினைத்து? (இவ்வாறு நாயகி பேசினாள்.)

2. [கண்கள் செய்த தவறு.]

தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்பது எவன். [1172]

பின்னால் இப்படி நடக்கக்கூடும் என்பதனை ஆராய்ந்தறியாமல் அன்றைய தினம் காதலரைப் பார்த்த மையுண்ட என்னுடைய இந்தக் கண்கள் நம்மால்தானே இத்துன்பம் வந்ததென்று அறிந்துகொள்ளாமல் இப்போது துன்பப் படுவது ஏனோ?

3. [இது நகைப்புக்கு இடமானது—நாயகி கூறுவது.]

கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து. [1173]

இந்தக் கண்கள் அன்று நாயகரைத் தாமே விரைந்து நோக்கி இன்று தாமே அழுது கொண்டிருக்கின்றன. இந்த அறியாமையால் நடைபெறுகின்ற செயல் நாம் பார்த்துச் சிரிக்கத்தக்க தன்மையினை உடையதாக இருக்கின்றது.

4. [நீர் வற்றுகிற அளவுக்கு அழுகின்றன.]

பெயல்ஆற்றா நீர்உலர்ந்த உண்கண் உயல்ஆற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து. [1174]

இந்த மை தீட்டப்பெற்ற என்னுடைய கண்கள் நான் தப்பிக்க முடியாத ஒழிவில்லாத காம நோயினை என்னிடத்தில் நிறுத்திவிட்டு, தாமும் அழ முடியாத அளவுக்கு கண்களில் நீர் வற்றிவிட்ட நிலையினை அடைந்து விட்டன.

5. [காம நோயினைச் செய்த கண்கள்.]

படல்ஆற்று பைதல்உழக்கும் கடல் ஆற்றுக்
காமநோய் செய்தஎன் கண். [1175]

பெரிய கடலும் சிறிதாகும் வண்ணம் பெரிய காம நோயினை எனக்குச் செய்த என்னுடைய கண்கள் தாமும் தூங்க முடியாத நிலையினை அடைந்து துன்பத்தினை அனுபவித்துக் கொண்டிருக்கின்றன. (இவ்வாறு நாயகி கூறினாள்.)

6. [கண்களின் அவல நிலை.]

ஓஒ இனிதே எமக்குஇந்நோய் செய்தகண்
தாஅம் இதன்பட் டது, [1176]

எமக்கு இந்தக் காமநோயினை உண்டாக்கிய என்னுடைய கண்கள் தாமும் தூங்காமல் அழுதுகொண்டே இருக்கும் நிலையில் உள்ளன. இந்த நிலைமை மிகவும் இனிதாக இருக்கின்றது.

7. [நீர் முழுதும் வற்றிப் போகிறது.]

உழந்துழந்து உண்ணீர் அறுக விழைந்துஇழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண். [1177]

உள்ளம் உருகி மிகவும் விரும்பி வேண்டி அன்று காதலரைக் கண்டு மகிழ்ந்த கண்கள், இப்போது தூங்காமல் அழுகின்ற துன்பத்தினை நிறைய அனுபவித்து தம்முன் இருக்கின்ற நீர் அற்றுப் போவதாகுக. (நாயகி பேசியது.)

8. [செயலால்தான் பிரிந்துள்ளார்.]

பேணுது பெட்டார் உளர்மன்னே மற்றவர்க்
காணுது அமைவில கண். [1178]

உள்ளத்தால் என்னை விரும்பாதிருந்து, வார்த்தைகளினுல் விரும்பிய நாயகர் இங்கேயேதான் இருக்கின்ருர். அப்படி இருப்பதால் யாது பயன்? என்னுடைய கண்கள் அவரைக் காணுமல் பொறுத்திருக்கமாட்டாதவைகளாயின.

9. [துயில்வனவாக கண்கள் இல்லை.]

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண். [1179]

காதலர் வாராத நாட்களிலே அவரது வருகையினைப் பார்த்துக் கொண்டே இருப்பதால் கண்கள் தூங்குவதில்லை; காதலர் வந்த நாட்களிலே, அவர் பிரிந்து சென்றுவிடுவாரோ என்று அவரைப் பார்த்துக்கொண்டே தூங்குவதில்லை. ஆதலால் இந்த இரண்டு வகைகளிலும் என்னுடைய கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினை அடைகின்றன.

10. [ஊரார் எளிதில் அறிந்துகொள்ளுவர்.]

மறைபெறல் ஊரார்க்கு அரிதன்ருல் எம்போல்
அறைபறை கண்ணூர் அகத்து. [1180]

எம்மைப் போன்று பறையடிப்பது போல வெளிப்படுத்துகின்ற கண்களை உடையவர்கள் தம்முடைய மனத்திலே வைத்திருக்கும் மறை பொருள்களை (இரகசியத்தை) அறிதல் இவ்வூர் மக்களுக்கு எளிதான காரியமாகும்.

## 119. பசப்புறு பருவரல்

1. [பிரிவினுல் பசலை நிறமடைந்த நாயகி கூறியது.]

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்
பண்புயார்க்கு உரைக்கோ பிற. [1181]

என்னை விரும்பிக் கேட்ட நாயகர்க்குப் பிரிவை அப்போது உடன்பட்டு இசைந்தேன். பிரிவினைத் தாங்க முடியாமல் இப்போது பசலை நிறம் அடைந்தேன். இப்படிப்பட்ட என்னுடைய பண்பான தன்மையினை யாரிடம் சொல்லுவேன்?

2. [உடம்பில் பசப்பு நிறம் பரவுதல்.]

*அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்*
*மேனிமேல் ஊரும் பசப்பு.* [1182]

இந்தப் பசப்பு நிறமானது காதலராகிய அவர் உண்டாக்கி விட்டார் என்னும் மகிழ்ச்சி மிகுதியினாலே என்னுடைய உடம்பின்மீது ஏறி ஊர்ந்து செல்லுகின்றது.

3. [அழகும் நாணமும் போயிற்று.]

*சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா*
*நோயும் பசலையும் தந்து.* [1183]

பிரிந்து செல்லும்போதே என்னுடைய உடம்பு அழகினையும் நாணத்தினையும் அவர் கொண்டு சென்றார். அந்த இரண்டிற்கும் கைம்மாறாக இந்தக் காம நோயினையும் பசலை நிறத்தினையும் தந்தார்.

4. [பசலை நிறம் வந்தது—வஞ்சனையானது.]

*உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்*
*கள்ளம் பிறவோ பசப்பு.* [1184]

நான் காதலரின் சொற்களை மனத்தில் நினைத்துக் கொண்டே இருக்கின்றேன். அவருடைய நற்குண நற்செயல்களையே என்னுடைய வாயினால் சொல்லிக்கொண்டே இருக்கின்றேன். அப்படி இருந்தும் இந்தப் பசலை நிறம் கள்ளத்தனமாக வந்தது—வஞ்சனையாக இருக்கின்றது.

5. [பசலை நிறம் ஊர்கின்றது.]

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்புஊர் வது. [1185]

அந்தக் காலத்தில் என்னுடைய நாயகர் என்னை விட்டுப் பிரிந்து செல்வாராக; எனது உடம்பு பசலை நிறம் அடைவது இங்கே யன்றோ? அப்படிப்பட்டது இப்போது வேறு மாதிரி யாகுமோ?

6. [பசப்பு நிறம் வருகின்ற நேரம்.]

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு. [1186]

எரிகின்ற விளக்கினது சோர்வினைப் பார்த்து நெருங்கி வருகின்ற இருளினைப்போல இந்தப் பசலை நிறம் நாயகரது புணர்ச்சியின் சோர்வு பார்த்து நெருங்கி வருவதாகும். முயக்கம் என்பது தழுவியிருப்பதைக் குறிப்பதாகும்.

7. [அள்ளிக்கொள்ளும் பசப்பு.]

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. [1187]

முன்னொரு நாள் நாயகரைத் தழுவிக் கொண்டிருந் தேன். அப்போது அறியாமல் சிறிது விலகினேன். அவ் வாறு விலகிய அந்த அளவிலே இந்தப் பசலை நிறமானது அள்ளிக்கொள்ளப்படும் பொருளினைப்போல என்மீது வந்து நிறைந்து விட்டது.

8. [நாயகன் பிரிந்ததைக் கூறுவதில்லை.]

பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல். [1188]

இவள் பசலை நிறம் அடைந்து விட்டாள். துன்பத் தினைப் பொறுத்திருக்க முடியவில்லை என்பதாக என்னைப்

பழி கூறுகிறார்களே யல்லாமல், இந்தப் பெண்ணைப் பிரிந்து நாயகர் போயிருக்கிறாரே என்று யாரும் சொல்லுவதில்லை.

9. [பசலை நிறம் உண்டாகி இருக்கட்டும்.]

பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின். [1189]

நாயகன் பிரிவை நானே உடன்படும் வகையில் சொல்லிய காதலர் நல்ல நிலையில் இருந்து வருவாராயின் என்னுடைய மேனி பட்டதுபட பசலை நிறம் அடையக் கடவது. பிரிந்த நாயகர் நன்றாக இருக்க வேண்டியதுதான் அவளுடைய ஆசையாகும்.

10. [காதலரை யாரும் தூற்றிப் பேசக்கூடாது.]

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். [1190]

அன்றைய தினம் குறை நயப்பித்துக் கூடிய நாயகரின் அருளாமையை இன்று மற்றவர்கள் தூற்றிப் பேசாது இருப்பார்களாயின், பசப்புற்றாள் என்ற பெயரினை நான் பெறுதல் எனக்கு நல்லதே யாகும்.

## 120. தனிப்படர் மிகுதி

1. [காம இன்பத்தின் முதிர்ச்சி சொல்லப்படுகிறது.]

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழ்இல் கனி. [1191]

தம்மாலே இன்ப மனத்துடன் விரும்பப்பட்ட கணவர் காதலியாகிய தம்மை விரும்பப்பட்ட பெண்கள் காம இன்ப அனுபவத்தினது வித்தில்லாத கனியைப் பெற்றவராவர் என்பதாம். இன்பக் காதலியை நாயகர் விரும்பி இருக்க வேண்டும். (தனித்திருக்கும் நாயகி பேசுகிறாள்.)

2. [மழையும் மகளிர் இன்பமும்.]

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. [1192]

தம்மை விட்டுப் பிரிந்திருக்க இயலாத இன்ப மகளிர்க்கு அக்காதலியை விட்டு நீங்கி இருக்க முடியாத கணவர் கால மறிந்து வந்து செய்கின்ற அன்புச் செயல் தன்னையே நோக்கி உயிர் வாழ்கின்ற மக்களுக்கு மழையானது காலமறிந்து அள வறிந்து வந்து பெய்வது போன்றதாகும்.

3. [நாயகன் அன்பு நாயகிக்கு உயர்ச்சி.]

வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு. [1193]

தம்மால் இன்பத்துடன் விரும்பப்படுகின்ற நாயகரால் விரும்பப்படுகின்ற நாயகிமார்களுக்கு, ''பிரிந்த கணவர் விரைவில் வருவார் இன்புற்றுத் திளைப்போம்''— என்று எண்ணிக் கொண்டிருக்கின்ற பெருமிதம் பொருத்தமான தாகும்.

4. [கற்புடை மகளிர் பாராட்டும் நாயகி]

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின். [1194]

கற்புடைய பெண்களாலே நன்கு மதிக்கப்படுவாரும், தம்மால் இன்பத்துடன் விரும்பப்படுகின்ற கணவரால் அன் புடன் விரும்பப்படாராயின் அப்படிப்பட்டவர்கள் தீவினை யுடையவர்களே ஆவார்கள்.

5. [காதலரும் அன்பு செய்தல் வேண்டும்.]

நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை. [1195]

நம்மாலே இன்பமாக காதல் கொள்ளப்பட்ட கணவர், நமக்கு என்ன இன்பத்தினைச் செய்ய முடியும்? நம்மைப் போலவே தாமும் (கணவரும்) நம்மிடத்தில் காதல் செய் யாதபோது; (நாயகி இவ்வாறு கூறினள்.)

6. [காவடிப் பாரமும் காமமும்.]

ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. [1196]

காமம் நிறைந்த காதலர்கள் இருவரிடையேயும் இன்ப வேகம் இருத்தல் வேண்டும். அப்படியில்லாமல் ஒருவரிடத் தில் மட்டும் உண்டாகுமாஞல் அது துன்பம் செய்வதாகும். காவடித் தண்டுக்கு இரண்டு பக்கங்களிலும் ஒத்த பாரம் இருப்பது போல இருவரிடத்தில் காமம் ஒத்திருக்குமாயின் அது மிகவும் இன்பம் செய்வதாகும்.

7. [காமன் இவ்வாறு செய்தல் சரியல்ல.]

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். [1197]

காம இன்பத்திற்குரிய இருவரிடத்திலும் ஒத்து இல் லாமல், ஒருவரிடத்தில் மட்டும் இருந்துகொண்டு வேதனை தருபவனாகிய காமன், பசப்பினால் உண்டான நோயினையும் துன்பத்தின் மிகுதியையும் அறிந்திருக்க மாட்டானோ?

8. [இனிய சொல்லுக்கு ஏக்கம்.]

வீழ்வாரின் இன்சொற் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல். [1198]

தம்மால் காதலிக்கப்படும் இன்ப நாயகரிடத்திலிருந்து ஓர் இனிய சொல்லினைக்கூட பெறாமல் பிரிவு துன்பத்தினைப் பொறுத்து உயிர் வாழ்கின்ற பெண்களைப் போல மனத் திடம் உள்ளவர்கள் உலகத்தில் இல்லையென்பதாகும்.

9. [அவருடைய சொற்களே இன்பம் தரும்.]

*நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு*
*இசையும் இனிய செவிக்கு.* [1199]

எம்மால் காதலிக்கப்பட்ட நாயகராகிய என் கணவர் எனக்கு அன்பு காட்டாதவராளுலும், அவரிடமிருந்து வருகின்ற எந்தச் சொல்லும் என் காதுகளுக்கு இன்பத்தினைச் செய்வதாகும்.

10. [நெஞ்சுடன் காதலி சொன்னது.]

*உருஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்*
*செருஅய் வாழிய நெஞ்சு.* [1200]

நெஞ்சமே! உன்னுடன் அன்பால் பொருந்தாத நாயகருக்கு உன்னுடைய மிகுதியான காமநோயினைச் சொல்லுவதைவிட, அருமையான அச்செயலினை விட்டுவிட்டு உனக்குத் துன்பம் செய்கின்ற கடலினைத் தூர்க்க முயற்சி செய்வாயாக; அது எளிதில் முடிந்து விடுவதாகும்!

## 121. நினைந்தவர் புலம்பல்

1. [பெருமகிழ்ச்சி தரும் காமம்.]

*உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்*
*கள்ளினும் காமம் இனிது.* [1201]

இன்பம் நுகர்ந்து பின்னர் பிரிந்திருக்கின்றபோதும் மனத்தாலே நுகர்ந்த இன்பத்தினை நினைத்துப் பார்த்தாலும் பெரிய இன்ப மகிழ்ச்சியினைத் தருவதால் உண்டபோது மட்டும் மகிழ்ச்சி தருகிற கள்ளினைவிட காமம் இன்பத்தினைத் தருவதாகின்றது. (நாயகன் இவ்வாறு கூறினான்.)

2. [நாயகியை மறவாதிருக்கும் நாயகன்.]

*எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்*
*நினைப்ப வருவதுஒன்று இல்.* [1202]

தம்மால் விரும்பப்படுகின்ற நாயகியைப் பிரிந்திருக்கின்றபோது நினைத்தால், அந்தப் பிரிவால் வருகின்றதொரு துன்பம் இல்லாததாகும். ஆகையினால் காமம் எப்படியாயினும் இன்பம் தருவதொன்றாகத்தான் இருக்கின்றது.

3. [நாயகி தோழிக்குச் சொல்லியது.]

*நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்*
*சினைப்பது போன்று கெடும்.* [1203]

எனக்குத் தும்மல் வருவது போலத் தோன்றி வராமல் போய் விடுகின்றது; வராமல் கெடுகின்றது. ஆகையினால் என்னுடைய நாயகர் என்னை நினைப்பவர் போலிருந்து நினைக்காமல் இருத்தல் வேண்டும்.

4. [எம் நெஞ்சத்திலேயே உள்ளார்.]

*யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எம்நெஞ்சத்து*
*ஓஒ உளரே அவர்.* [1204]

எம்முடைய நெஞ்சத்திடத்து எம் காதலர் எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கின்றார். அப்படியிருக்க, அவர் நெஞ்சிலும் யாமும் இருந்துகொண்டிருக்கின்றோமோ? (நாயகன் இனியும் வராததால் நாயகி சொன்னது.)

5. *[நாணமில்லாத நாயகரோ!]*

*தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்*
*எம்நெஞ்சத்து ஓவா வரல்.* [1205]

தம்முடைய (நாயகர்) நெஞ்சில் யாம் (நாயகி) செல்ல முடியாமல் காவல்கொண்ட நாயகர், என்னுடைய நெஞ்சுக்கு எப்போதும் — ஒழிவில்லாமல் வந்துகொண்டிருப்பதற்கு நாணமடைவதில்லையோ?

6. [நாயகி உயிருடன் இருப்பதற்குக் காரணம்.]

மற்றுயான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். [1206]

நான் நாயகருடன் சேர்ந்து இன்புற்ற நாட்களை நினைத்துக்கொண்டிருப்பதால் இப்பிரிவுத் துன்பத்திலும் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கின்றேன். அது இல்லாவிட்டால் வேறு எதனால் நான் உயிர் வாழ்ந்துகொண்டிருப்பேன்?

7. [மறவாதிருப்பதினால் நன்மையுண்டு.]

மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்புஅறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும். [1207]

அந்த இன்பத்தினை மறக்காதவளாக இருக்கின்றேன். இப்போது நினைத்தாலும் பிரிவுத்துன்பம் உள்ளத்தினைச் சுட்டுவிடுகின்றது. அவ்வாறு தாங்கிக்கொள்ள முடியாத நான் மறப்பேனேயானால் எதனால் இறந்துபோகாமல் இருப்பேன்.

8. [எவ்வளவு நினைத்தாலும் நாயகர் கோபிக்கமாட்டார்.]

எனைத்து நினைப்பினும் காயார் அனைத்துஅன்றோ
காதலர் செய்யும் சிறப்பு. [1208]

என்னுடைய காதலர் நான் அவரை எவ்வளவு அதிகமாக நினைத்தாலும் கோபிக்கமாட்டார். காதலர் எனக்குச் செய்யும் இன்பமானது அத்தகைய பெருமையானதொன்றன்றோ?

9. [நாம் இருவரும் வேறுவேறல்ல.]

விளியும்என் இன்உயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து. [1209]

முன்பெல்லாம் 'நாம் இருவரும் வேறல்ல' என்று சொல்லுவாரது அன்பில்லாத் தன்மையினை மிகமிக நினைந்து என்னுடைய இனிமையான உயிர் காலத்தினைக் கழித்துக் கொண்டிருக்கிறது.

10. [சந்திரனைப் பார்த்துக் கூறியது.]

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி. [1210]

சந்திரனே! என்னுடைய நெஞ்சத்தில் நீங்காமலிருந்து இப்போது நீங்கிச் சென்ற நாயகரை, கண்ணினாலாவது பார்க்கும்வரை நீ மறையாதிருப்பாயாக; அவ்வாறு செய்தால் நீ வாழ்வாயாக; (மதி இருவராலும் பார்க்கப்படுவதால் இவ்வாறு கூறினாள்.)

## 122. கனவு நிலை உரைத்தல்

1. [தூதொடு வந்த கனவு.]

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. [1211]

நான் வருந்துவதை அறிந்து என்னுடைய நாயகரது தூதினைக் கொண்டுவந்த கனவினுக்கு விருந்து என்பதாக என்ன செய்வேன்? (கணவனைக் கனவில் கண்டவள் கூறுவது.)

2. [தூதுவிடக் கருதிய நாயகி கூறுவது.]

கயலுண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன். [1212]

தூங்காமலேயே அழிகின்ற கயல் போன்ற மைதீட்டப் பட்ட என்னுடைய கண்கள் நான் இரக்கப்பட்டுக் கேட்பதற்காகத் தூங்குமானால், கனவிலே நான் கண்ட கணவருக்கு

தாங்கிக்கொண்டு பொறுத்திருக்கின்ற தன்மையினை நானே கூறுவேன்.

3. [கனவில் காணுவதால் பயன்.]

நனவினான் நல்கா தவரைக் கனவினான்
காண்டலின் உண்டுஎன் உயிர். [1213]

நனவில்—நினைவு நேரத்தில் வந்து அன்பு காட்டாத நாயகரைக் கனவில் காணுவதால் என்னுடைய உயிரானது நீங்காமல் இருக்கின்றது.

4. [கனவில் உண்டாகும் காமம்.]

கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. [1214]

நனவில் வந்து—நினைவு நேரத்தில் வந்து அன்பு செய்யாத காதலரை அவர் போயிருக்கிற இடத்திற்குத் தேடிச் சென்று கொண்டுவந்து தருதலால் அந்தக் கனவினால் காம இன்பம் எனக்கு உண்டாவதாகின்றது.

5. [கனவினால் அடைகின்ற இன்பம்.]

நனவினான் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது. [1215]

நினைவு காலத்தில் (நனவினால்) காதலரைக் கண்டு அனுபவித்த இன்பமும் அப்போது கண்ட நேரத்திலேயே இனிதாக இருந்தது. இப்போது கனவில் கண்டு அனுபவித்த இன்பமும் கண்டபொழுதே இன்பம் தருவதாக அமைந்தது.

6. [காதலர் நீங்காதிருக்க வழி.]

நனவுஎன ஒன்றுஇல்லை ஆயின் கனவினான்
காதலர் நீங்கலர் மன். [1216]

நனவு (நினைவுக் காலம்) என்று சொல்லப்படுகின்ற ஒன்று இல்லாதிருந்தால் கனவினில் வந்து என்னைக் கூடிய காதலர் என்னை விட்டுப் பிரியவே மாட்டார்.

7. [விழித்தும் காணுதவளாகிப் பேசுகிருள்.]

*நனவினுன் நல்காக் கொடியார் கனவினுன்*
*என்எம்மைப் பீழிப் பது.* [1217]

நனவில் வந்து அன்பு காட்டாத கொடுமையான காதலர் நாள்தோறும் கனவில் மாத்திரம் வந்து எம்மை வருத்துவது எந்தத் தொடர்பு பற்றி?

8. [நெஞ்சத்திலும் தோள் மேலும்.]

*துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்*
*நெஞ்சத்த ராவர் விரைந்து.* [1218]

என்னுடைய நெஞ்சத்திலேயே காதலர் இருக்கின்ருர் ஆனபடியால் யான் தூங்கும்போது என்னுடைய தோள் களின் மீது இருப்பவராகி விழித்துப் பார்க்கும்போது விரைந்து நெஞ்சிற்குள் சென்று இருப்பவர் ஆகிவிடுகின்ருர்.

9. [காதலரைப் பற்றிப் பேசுவோர்.]

*நனவினுன் நல்காரை நோவர் கனவினுன்*
*காதலர்க் காணு தவர்.* [1219]

கனவினில் காதலரைக் கண்டறியும் அனுபவம் இல்லாத மகளிர் நனவில் வந்து அன்பு செய்யாத என்னுடைய காத லரை அன்பு இல்லாதவரென்று நொந்து பேசுகிருர்கள்.

10. [காதலியை விட்டுப் போனுர் என்பர்.]

*நனவினுன் நம்நீத்தார் என்பர் கனவினுன்*
*காணுர்கொல் இவ்ஊ ரவர்.* [1220]

இவ்வூரிலுள்ள பெண்கள் நனவினிடத்து (நினைவு காலம்) நம்மை விட்டுக் காதலர் நீங்கிவிட்டார் என்று நாயகர் மீது கொடுமை சொல்லிக் கொண்டிருக்கின்றனர். கனவினில் நாயகர் நீங்காமல் வந்துகொண்டிருப்பதைக் கண்டறிய மாட்டார்களோ?

## 123. பொழுது கண்டு இரங்கல்

1. [மாலைப் பொழுதினைப் பார்த்துச் சொன்னாள்.]

மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்
வேலைநீ வாழி பொழுது. [1221]

மாலைப் பொழுதே! நீ என்னுடன் நாயகர் இருந்த போது வந்த மாலைப் பொழுது அல்ல; காதலரைக் கூடி மகிழ்ந்த மகளிரது உயிரை உண்ணுகிற முடிவு காலமாய் இருந்தாய்.

2. [மாலைப் பொழுதும் துன்பமடைந்துள்ளது.]

புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. [1222]

மயங்கிய மாலைப் பொழுதே! நீயும் எம்மைப்போல் ஒளியிழந்து காணப்படுகின்றாய்; வாழ்வாயாக! உன்னுடைய துணைவரும் எம்முடைய துணைவரைப்போல இரக்கமில்லாத வரோ?

3. [இந்த நோய் அடக்க முடியாத தாயிற்று.]

பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும். [1223]

நாயகர் என்னுடன் இருக்கும் நாட்களில் எல்லாம் என் முன் நடுக்கத்துடன் பசந்துவந்த இந்த மாலைப்பொழுதானது உயிர் வாழ்க்கையிலேயே எனக்கு வெறுப்பினை உண்டாக்கி

அதற்கு வருகின்ற துன்பம் தொடர்ந்து வளர்ந்து மிகுந்து வருவதாகின்றது.

4. [கொலைக்களத்திற்கு வருதல்.]

*காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து*
*ஏதிலர் போல வரும்.* [1224]

காதலர் இருந்தபோதெல்லாம் மனமகிழ்ச்சியை உண்டாக்கிய இந்த மாலைப்பொழுது காதலர் இல்லாத இப்பொழுது கொலை செய்கின்ற கொலைக்களத்தில் இருப்பவர்கள் போல என் உயிரைக் கொண்டு செல்ல வருகின்றது.

5. [காலை நேரமும் மாலைப் பொழுதும்.]

*காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்*
*மாலைக்குச் செய்த பகை.* [1225]

காலைப் பொழுதிற்கு என்னாலே செய்யப்பட்ட உபகாரம் —நன்மை யாது? (அது எனக்குத் துன்பம் செய்வதில்லை) நான் மாலைப் பொழுதிற்குச் செய்த தீமை யாது? ஒன்றுமில்லையே! (மாலைப் பொழுது துன்பம் செய்கிறது.)

6. [அந்த நாளில் அறிந்தேனில்லை.]

*மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத*
*காலை அறிந்தது இலேன்.* [1226]

மாலை நேரம் இப்போது பகையாகி எனக்குத் துன்பம் செய்வதை என்னுடைய நாயகர் என்னை விட்டுப் பிரிவதற்கு முன்பே அறிந்துகொண்டேனில்லை.

7. [மாலைப்பொழுதில் இந்நிலை அடையக் காரணம்.]

*காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி*
*மாலை மலரும்இந் நோய்.* [1227]

இக்காம நோயாகிய மலர் காலை நேரத்தில் அரும்பாகி பகலெல்லாம் பெரிய அரும்பாய் (போதாகி) முதிர்ந்து மாலைப் பொழுதில் மலர்ந்து விடுகின்றது.

8. [ஆயன் குழல்.]

*அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்*
*குழல்போலும் கொல்லும் படை.* [1228]

முன்பெல்லாம் இன்பம் செய்த ஆயனது குழலோசை இப்போது நெருப்பினைப் போல சுடுவதாகின்றது. அத்துடன், மாலைப் பொழுதிற்குத் தூதும் ஆகி, அந்த மாலை வந்து கொல்லும்போது கொலை செய்யும் படையுமாய் அமைந்தது.

9. [மாலைப் பொழுதும் மகளிரும்.]

*பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு*
*மாலை படர்தரும் போழ்து.* [1229]

கண்டவர்களெல்லாம் மதி மருளும்—மயக்கமுறும் வகையில் இந்த மாலைக்காலம் வரும்போது இவ்வூரெல்லாம் மயங்கி நோயினை அனுபவிப்பதாகும். (முன்பெல்லாம் அவள் மட்டும் மயங்கி இருந்தாள்.)

10. [பிரிவுத் துன்பத்தின் உச்சம்.]

*பொருண்மாலை யாளரை உள்ளி மருள்மாலை*
*மாயும்என் மாயா உயிர்.* [1230]

நாயகர் பிரிவினைப் பொறுத்து இறக்காமல் இருந்த என் உயிரானது, பொருள் தேடுவதையே குறியாகக் கொண்ட என்னுடைய நாயகரை நினைந்து, மயங்குகின்ற இந்த மாலை நேரத்திலே மாய்கின்றது.

# 124. உறுப்பு நலன் அழிதல்

1. [கண்கள் அழகிழந்தன.]

*சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் உள்ளி*
*நறுமலர் நாணின கண்.* [1231]

பிரிவினைத் தாங்கிக்கொள்ள முடியாத நிலைமை நம்மிடத்திலே இருக்க தொலைதூரத்திலே சென்றிருக்கும் காதலரை நினைத்து அழுவதால் கண்கள் ஒளியிழந்து, முன்னே தம்மைக் கண்டு நாணமுற்ற மலர்கட்கு இப்போது கண்கள் நாணிவிட்டனவாகும்.

2. [கண்களின் நிலைமை.]

*நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்*
*பசந்து பனிவாரும் கண்.* [1232]

அழகிய நிறம் வேறுபட்டு நீரைச் சொரிந்துகொண்டிருக்கின்ற கண்கள் தம்முடைய காதலர் அன்பு செய்யாதிருக்கும் தன்மையினைப் பிறர்க்கு எடுத்துக் கூறுவன போலிருக்கின்றன.

3. [காதலியின் தோள்கள் நிலைமை.]

*தணந்தமை சால அறிவிப்ப போலும்*
*மணந்தநாள் வீங்கிய தோள்.* [1233]

திருமணமானபோது மகிழ்ச்சிப் பெருக்கால் நாயகியின் தோள்கள் பூரித்துக் காட்சியளித்தன. இப்போது நாயகனைப் பிரிந்திருக்கின்றாள். வருத்தம் மிகுந்ததினால் உடம்பு மெலிந்து அவளுடைய தோள்களும் மெலிந்து பிரிந்திருக்கும் நிலைமையினை உணர்த்துகின்றன.

4. [வாடிய தோள்கள்.]

*பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்*
*தொல்கவின் வாடிய தோள்.* [1234]

என்னுடைய துணைவர் பிரிவால் நீங்கியதால் அவரால் எனக்கு உண்டான செயற்கை அழகு மாத்திரமே யல்லாமல் பழைய இயற்கை அழகினையும் இந்தத் தோள்கள் இழந்து விட்டன. அதற்கும் மேலாக தம்முடைய பெருமை யிழந்து பசும்பொன்னாலான வளையல்களும் கழலுகின்றன.

5. [கொடியவர் கொடுமை உரைக்கும்.]

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். [1235]

பிரிந்து இன்னும் வாராதிருக்கின்ற கொடியவரான காதலரின் கொடுமையான செயலினைப் பலரறிய சொல்லுகின்றன; எவையென்றால், தோள் வளையல்களும் கழன்று பழைய இயற்கை யழகினையும் இழந்த இத்தோள்கள், என்பதாகும்.

6. [தோள் வளையல்களும் தோளும்.]

தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து. [1236]

தோள் வளையல்கள் கழலுமாறு தோள்கள் மெலிந்து வாடவும், அவற்றைக் கண்டதினால் நாயகரைக் கொடியவர் என்று சொல்லுகின்றனர். அதனைத் தாங்க முடியாமல் என்னுள்ளே நொந்துகொள்ளுகின்றேன்.

7. [மனத்தைப் பார்த்து அவள் பேசியது.]

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்
வாடுதோள் பூசல் உரைத்து. [1237]

நெஞ்சமே! கொடியவராகிய என்னுடைய காதலர்க்கு என்னுடைய வாடுகின்ற தோள்களினால் உண்டாகின்ற

ஆரவாரத்தினை எடுத்துக் கூறி ஒரு மேம்பாட்டினை—பெருஞ் சிறப்பினை அடையமாட்டாரயோ?

8. [நாயகன் தன்னுள்ளே சொன்னது.]

முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். [1238]

தன்னை (காதலியை) இறுகத் தழுவிக்கொண்டிருந்த கைகளை ஒருநாள் தளர்த்தினேன். அதனைத் தாங்கமுடியாமல் பசுமையான வளையல்களை அணிந்த இப்பேதைப்பெண்ணினது நெற்றியானது நிறம் வேறுபட்டது. (இந்தப் பிரிவினால் எப்படி இருக்குமோ!)

9. [கண்ணும் பசப்பு நிறமும்.]

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். [1239]

தழுவிய கைகளைத் தளர்த்தலால் அப்புணர்ச்சிக்கு இடையே சிறு காற்று நுழைந்தது. அந்த இடைவெளியைப் பொறாமல் பேதைப் பெண்ணாகிய என்னுடைய காதலியின் பெரிய குளிர்ச்சியான கண்கள் பசலை நிறம் அடைந்தன. (அத்தகைய காதலியைக் குறித்துக் காதலன் பேசினான்.)

10. (நெற்றியில் உண்டானதைக் கண்ட கண்கள்.)

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. [1240]

சிறு காற்று நுழைந்ததால் கண்களின் பசப்புத்தன்மை துன்பம் அடைந்தது. இவ்வாறு துன்பம் அடைந்ததற்குக் காரணம், தனக்கு அருகில் இருக்கும் ஒளி பொருந்திய நெற்றியால் உண்டாக்கப்பட்ட பசப்பினைக் கண்டு என்பதாகும்.

# 125. நெஞ்சொடு கிளத்தல்

1. [நாயகி தன் ஆற்றுமை கூறியவாறு.]

நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. [1241]

நெஞ்சமே! எந்த வகையாலும் தீர்க்கமுடியாத இந்தக் காமநோயினைத் தீர்க்கக்கூடிய மருந்தொன்றினை எனக்கு எப்படியாவது அறிந்து சொல்லமாட்டாயோ?

2. [காதலனைக் காணும் வேட்கை.]

காதல் அவர்இல ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. [1242]

என்னுடைய மனமே! நீ வாழ்வாயாக! நாயகர் என் மீது ஆசையில்லாதவராக இருக்கின்றார். (இருந்திருந்தால் வந்திருப்பார்) அப்படியிருக்க அவருடைய வருகையினைப் பார்த்து நீ வருத்தப்படுவதற்குக் காரணம் உன்னுடைய அறியாத் தன்மையே தவிர வேறில்லை.

3. [நோய் உண்டாக்கியவரிடம் இல்லை.]

இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துஉள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். [1243]

நெஞ்சமே! நாயகரிடத்தும் போகாமல் இங்கேயே பிரிவால் இறந்திடாமலும் இருந்து அவர் வருகையினை எண்ணி வருந்துவது ஏனோ? இந்தத் துன்பத்தினை நமக்குச் செய்த நாயகருக்கு நம்மீது இரக்கப்பட்டு வருகின்ற நினைப்பு உண்டாகாது.

4. [கண்கள் தின்னுகின்றன.]

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று. [1244]

நெஞ்சமே! நீ நாயகரிடத்தில் செல்லுவாயானல் இந்தக் கண்களையும் உன்னுடன் கொண்டுசெல்லுவாயாக; 'அவரைக் காட்டு' என்று—அவரைக் காண விரும்பி—என்னைத் தின்னுவது போன்று இக்கண்கள் துன்பம் தந்துகொண்டிருக்கின்றன.

5. [கைவிடுதல் இயலுமோ?]

*செற்றார் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்*
*உற்றால் உறாஅ தவர்.* [1245]

நெஞ்சமே! நாம் காதலரை விரும்பி நேசித்திருக்க நம் மீது காதல் விருப்பம்கொண்டிருந்த நாயகரை, நம்மை வெறுத்துவிட்டார் என்று நினைத்து கோபித்துக்கொண்டு கைவிட்டிருக்கும் நிலை நமக்கு உண்டாகுமோ?

6. [நெஞ்சைப் பார்த்து அவள் சினந்துகொண்டது.]

*கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துஉணராய்*
*பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு.* [1246]

என்னுடைய மனமே! நாம் பிணங்கிக்கொண்டால் நம்முடன் புணர்ந்து அப்பிணக்கினை நீக்கவல்ல நாயகரைப் பார்த்தால் பொய்யாகவேனும் அவருடன் பிணங்கிக் கொண்டு பிறகு நீங்கமாட்டாய்; அப்படியும் செய்யமுடியாத நீ அவரைக் கொடியவரென்று பொய்யாகப் பிணங்கிக் கொண்டிருக்கின்றாய்;

7. [நாணம் அவரிடம் செல்ல தடுக்கிறது.]

*காமம் விடுஒன்றோ நாண்விடு நல்நெஞ்சே*
*யானோ பொறேன்இவ் இரண்டு.* [1247]

நல்ல என் மனமே! ஒன்று காமவிருப்பத்தினையாவது விட்டுவிடுவாயாக; காம ஆசையினை விடமாட்டாயாகில் நாணத்தினையாவது விட்டுவிடு: இல்லாவிட்டால் இந்த

இரண்டினையும் ஒன்றாக இருக்க நான் தாங்கமாட்டேன். (நாயகி பேசியது.)

8. [நெஞ்சினுடைய பேதைமை.]

பரிந்தவர் நல்கார்என்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு. [1248]

என்னுடைய மனமே! நாயகர் நம்முடைய வேதனையை அறியாமையால் வருந்தி நம்மிடம் வந்து அன்பு காட்டமாட்டார் என்று எண்ணி நம்மைப் பிரிந்துபோயிருக்கின்ற நாயகர் பின்னே துன்பத்துடன் ஏங்கி போகின்றாய்; நீ ஒன்றுமறியாத பேதை;

9. [காதலர் இருக்கின்ற இடம்.]

உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு. [1249]

என்னுடைய நெஞ்சமே! நம்முடைய காதலர் உள்ளத்திலேயே இருந்துகொண்டிருக்கின்றார். அப்படியிருக்க, நீ இப்போது வெளியே தேடிக்கொண்டு யாரிடத்திற்குப் போகின்றாய்?

10. [மறந்திருக்கவே முடியாது.]

துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின். [1250]

நம்மைச் சேர்ந்திருக்காத — நம்மைத் துறந்து போன காதலரை நம்முடைய மனத்திலேயே நினைத்துக்கொண்டு இருப்போமாக; முன்னர் இருந்த புற அழகேயன்றி இன்னமும் அகத்து அழகையும்—நிறைகுணத்தினையும்—இழந்து விடுவோம்.

## 126. நிறை அழிதல்

1. [நாணமும் நிறைகுணமும் அழிகின்றன.]

*காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்*
*நாணுத்தாள் வீழ்த்த கதவு.* [1251]

நாணம் என்கின்ற தாழ்ப்பாள் போடப்பட்ட நிறையென்று சொல்லப்படுகின்ற கதவினைக் காமவேட்கை என்கின்ற குந்தாலி (உலக்கை) முறிக்கின்றது.

2. [காமம் எனப்படும் ஒன்று.]

*காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை*
*யாமத்தும் ஆளும் தொழில்.* [1252]

நள்ளிரவிலேயும் இந்தக் காமம் என்னுடைய மனத்தினை தொழிலிலே ஆட்சி செய்துவருகின்றது. ஆதலால் காமம் என்ற ஒன்று இரக்கமில்லாததாக இருக்கின்றது. அந்தோ!

3. [மகளிர் காமம் மறைப்ப தொன்றன்று.]

*மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்*
*தும்மல்போல் தோன்றி விடும்.* [1253]

இந்தக் காமநோயினை நான், அந்தோ! என்னுள்ளத்தினுள்ளே மறைக்க நினைக்கின்றேன். அதனால், இது என்னுடைய எண்ணப்படி இருக்காமல் தும்மலைப் போலத் தோன்றி வெளிப்பட்டு விடுகின்றது.

4. [பலரும் அறிய வெளிப்படுகின்றது.]

*நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்*
*மறைஇறந்து மன்று படும்.* ]1254]

நான் நிறைகுணம் உடையவள் என்று, ஐயோ, நினைத்துக்கொண்டிருப்பேன். ஆனால் என்னுடைய இந்தக்

காமம் மறைத்து வைத்திருப்பதையும் கடந்து பலரும் அறிய வெளிப்பட்டுவிடுகின்றது.

5. [பெருந்தகைமை கிடையாது.]

*செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்*
*உற்றார் அறிவதொன்று அன்று.* [1255]

தம்மை விட்டுப்போன நாயகர் பின்னே செல்லாமல் தாமும் நீங்கி நிற்கிற பெருந்தன்மையான நிறையுடைமைக் குணம் காம நோயினை அடைந்தவரால் அறியப்படுவதொன்று அல்ல என்பதாகும்.

6. [காமநோய் வந்த காரணம்.]

*செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ*
*எற்றுஎன்னை உற்ற துயர்.* [1256]

தம்மை விட்டு நீங்கிச் சென்ற காதலர் பின்னே நான் செல்லவேண்டி இருப்பதால் என்னையடைந்த இந்தக் காமத் துன்பமானது எத்தன்மையானது? மிகவும் நல்லதென்பதாகும். அவர் இருக்குமிடம் செல்லத் தூண்டியதாகும்.

7. [காதலரிடம் பிணங்காமைக்குக் காரணம் கூறினாள்.]

*நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்*
*பேணியார் பெட்ப செயின்.* [1257]

நம்மால் விரும்பப்பட்ட காதலர் வந்து, காம இன்பத்தில் விரும்பியவைகளைச் செய்கின்றார், ஆதலால் அந்த நேரத்தில் நாணம் என்று சொல்லப்பட்ட ஒன்று உண்டு என்பதையே அறியமுடியாதவரானோம்.

8. [உடைக்கும் படை.]

*பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்*
*பெண்மை உடைக்கும் படை.* [1258]

நமக்கு (பெண்களுக்கு) நிறைகுணம் என்பது பாதுகாப்பாக உள்ளது. அதனை உடைத்து அழிக்கின்ற படை என்னவென்றால், பல பொய்களைப் பேசுவதில் வல்லவராகிய கள்வனுடைய (நாயகருடைய) பணிவுடைய சொற்கள் அல்லவா?

9. [பிணங்கிக்கொள்ள இயலவில்லை.]

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. [1259]

பிணங்கிக்கொள்ள வேண்டுமென்று நினைத்து சென்றேன். அப்படிப் போனாலும் என்னுடைய மனமானது அவருடன் (நாயகருடன்) சேர்ந்து கலத்தலைத் தொடங்கிவிட்டதைக் கண்டு அவரைத் தழுவிக்கொண்டேன்.

10. [தீயிலிட்ட நிணம்.]

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல். [1260]

நிணத்தினை (கொழுப்பு) நெருப்பில் போட்டால் அது உருகுவதைப் போல நாயகரைக் கண்டால் நிறையழிந்து உருகுகின்ற நெஞ்சினையுடைய மகளிர்க்குப் பிணங்கிக் கொண்டு அதன்பின் புணர்ந்து இருப்போம் என்று நினைப்பது உண்டாகுமோ?

## 127. அவர்வயின் விதும்பல்

1. [காணவேண்டிய வேட்கையினால் அவள் சொல்லியது.]

வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல். [1261]

என்னுடைய விரல்கள் எம் காதலர் பிரிந்து போன நாட்களைச் சுவரிலே குறிவைத்துத் தொட்டு எண்ணி

எண்ணிப் பார்ப்பதனுலே தேய்ந்து போயின; அதுமட்டுமல்லாமல் என்னுடைய கண்களும் அவர் வருகின்ற வழி பார்த்துப் பார்த்து ஒளியிழந்து புன்மைத் தன்மை அடைந்தன.

2. [காதலரை மறந்திருப்பதே இயலாது.]

இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து. [1262]

ஒளிவிடுகின்ற அணிகலன்களை உடையவளே! இன்றைய நாளில் நாயகரை மறப்பேனுயின் மேலும் என்னுடைய அழகானது விட்டு நீங்க, என்னுடைய தோள்கள் தோள் வளையல்கள் கழலப்பட்டனவாகும்.

3. [உயிர் பிரியாதிருப்பது எதனுல்?]

உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்ருர்
வரல்நசைஇ இன்னும் உளேன். [1263]

இன்பத்தினை விரும்பாமல் தமது வெற்றியினையே விரும்பி தம்முடைய மனவெழுச்சியே துணையாகப்போனவர் திரும்பி இங்கு வருதலையே விரும்பி இருப்பதால் இந்தத் துன்பநிலையிலும் உயிர்வாழ்ந்துகொண்டிருக்கின்றேன்.

4. [என்னுடைய மனம் பருத்து எழுகின்றது.]

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொடு ஏறும்என் நெஞ்சு. [1264]

நம்மைப் பிரிந்துபோன நாயகர் காம இன்ப வேட்கையினுல் நம்மிடம் வருவதை நினைப்பதால் என்னுடைய நெஞ்சமானது துன்பம் நீங்கி மேன்மேலும் பருத்து எழுகின்றது.

5. [பசப்பு நீங்கிவிடும்.]

காண்கமன் கொண்கனைக் கண்ணுரக் கண்டபின்
நீங்கும்என் மென்தோள் பசப்பு. [1265]

என்னுடைய கண்கள் ஆரும் வகையில் என் நாயகரை காண்பேனாக; அவ்வாறு கண்ட பிறகு என்னுடைய மென்மையான தோள்களிலுள்ள பசப்பு நிறம் தானே நீங்குவதாகும். (நாயகி சொன்னது.)

6. [நாயகரைப் பருகுவன்!]

வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட. [1266]

வாராமல் பிரிந்திருந்த நாயகன் ஒருநாள் என்னிடம் வருவாராக; வந்தால் துன்பம் செய்துகொண்டிருக்கின்ற இந்த நோயெல்லாம் நீங்க ஐம்பொறிகளாலும் இன்பத்தினை உண்பேன்.

7. [கண்ணன்ன கணவர்.]

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். [1267]

கண்போன்று இனிய என்னுடைய நாயகர் வந்தால், காலங்கடந்து வந்ததற்காகப் பிணங்குவேனோ? தாங்க முடியாத துன்பம் நீங்கத் தழுவுவேனோ? இந்த இரண்டு செயல்களையும் கலப்பேனோ? யாது செய்யக் கடவேன்?

8. [அரசு வினைமுடித்து நாயகன் தலைமகளை நினைந்து கூறியது.]

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து. [1268]

நாட்டு மன்னன் போர்ச் செயலிலே வெற்றி பெறுவானாக; யாமும் திரும்பிப் போய் மனைவியைக் கூடி அங்கே மாலைப் பொழுதிற்கு விருந்து செய்யக் கடவேம், என்பதாகும்.

9. [ஒருநாள் பல நாட்களாகும்.]

ஒருநாள் எழுநாள்போற் செல்லும்சேண் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. [1269]

அயல் நாட்டிற்குச் சென்ற நம் காதலர் திரும்பி வரக் குறித்த நாளை மனதிற் கொண்டு ஏங்கி வருந்துகின்ற மகளிர்க்கு ஒரு நாளானது பல நாட்கள் போல நீண்டதாகக் காட்டும்.

10. [காதலன் நினைப்பு.]

பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்
உள்ளம் உடைந்துஉக்கக் கால். [1270]

பிரிவுத்துன்பம் தாங்கமுடியாமல் நம் காதலி உள்ளம் உடைந்து இறந்த பிறகு நம்மை அவள் பெற்றால்தான் யாது பயன்? பெறக் கடவளானால்தான் என்ன பயன்? அப்படிக்கின்றி மெய்சேர கலந்தால்தான் என்ன பயன்? இவை எதனாலும் பயனில்லை என்பதாகும்.

## 128. குறிப்பு அறிவுறுத்தல்

1. [நாயகன் குறிப்பறிகின்றான்.]

கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன்று உண்டு. [1271]

வெளியிட்டுச் சொல்லாமல் மறைத்தாயாயினும் அதற்கு உடன்படாமல் கைகடந்து உன்னுடைய மைதீட்டப் பெற்ற கண்களே எனக்குச் சொல்லக் கூடியது ஒரு காரியம் இருப்பதாகின்றது.

2. [பெண்மைத் தன்மை பெரிது.]

கண்நிறைந்த காரிகை காம்புஏர்தோள் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது. [1272]

என்னுடைய கண்ணிறைந்த அழகையும் மூங்கிலைப் போன்ற தோள்களையும் உடைய மாதுக்கு (நாயகிக்கு)ப் பொதுவாகப் பெண்பாலாரிடத்து இருக்கும் அறியாமைத் தன்மையினைக் காட்டிலும் மிகவும் பெரிதானதாக இருக்கின்றது.

3. [மணியும் நூலும்.]

*மணியுள் திகழ்தரு நூல்போல் மடந்தை*
*அணியுள் திகழ்வதொன்று உண்டு.* [1273]

சேர்க்கப்பட்ட மணிகளுக்குள்ளிருந்து புறத்தில் காணப்படுகின்ற நூலினைப்போல இப்பெண்ணின் அழகுக்குள்ளிருந்து புறத்தில் காணப்படுகின்ற குறிப்பொன்று இருப்பதாகின்றது.

4. [நகைப்பும் மணமும்.]

*முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை*
*நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு.* [1274]

அரும்பினுடைய முகிழ்ப்பினுள் புறத்தில் தோன்றாதவாறு இருக்கின்ற நறுமணத்தினைப் போல, இப்பேதைப் பெண் என்னுடன் நகைக்கக் கருதுகிற நகைப்பினது முகிழ்ப்பில் உள்ளதாயும் வெளிப் புறத்தில் புலனாகாததுமான குறிப்பு ஒன்று இருக்கின்றது.

5. [மருந்தொன்று இருக்கின்றது.]

*செறிதொடி செய்துஇறந்த கள்ளம் உறுதுயர்*
*தீர்க்கும் மருந்தொன்று உடைத்து.* [1275]

நெருங்கிய வளையல்களையுடைய பெண்ணானவள் என்னிடம் இல்லாத ஒன்றினை நினைந்து, அந்தக் காரணத்தினால் எனக்குத் தெரியாமல் மறைத்துப் போன குறிப்பு, என்னுடைய மிகுந்த துன்பத்தினைத் தீர்த்து நீக்கிவிடுகின்ற மருந்தொன்று உடையதாயிற்று.

6. [நாயகனுடைய குறிப்பறிந்த நாயகி.]

*பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிதுஆற்றி*
*அன்பின்மை சூழ்வது உடைத்து.* [1276]

நாயகர் வந்து பிரிவினாலாய நமது துன்பத்தை மிகுதியும் ஆற்றி நாம் மகிழ்ச்சியடையும் வண்ணம் கூடுகின்ற புணர்ச்சியானது பிறகும் அத்துன்பத்தினை அரிதாகப் பொறுத்திருந்து அவருடைய அன்பில்லாமையை நினைக்கும் தன்மை உடையதாக இருந்தது.

7. [முன்னமே அறிந்த வளையல்கள்.]

*தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்*
*முன்னம் உணர்ந்த வளை.* [1277]

குளிர்ந்த துறையை உடையவனான நாயகன் உடம்பினால் கூடியிருந்து நம்மை மனத்தினால் பிரிந்த நிலைமையினை அவனுடைய குறிப்பால் அறிதற்குரிய நம்மைக் காட்டிலும் என்னுடைய வளையல்கள் முன்னமேயே அறிந்து உணர்த்தினவாகும்.

8. [மேனி, பலநாள் போல் பசந்தது.]

*நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்*
*எழுநாளேம் மேனி பசந்து.* [1278]

எம்முடைய காதலர் நேற்றுதான் நம்மை விட்டுப் பிரிந்து சென்றார். நாமும் அப்பிரிவுத் துன்பத்தினால் உடம்பு பசலை நிறமடைந்து பலநாட்கள் இருந்தது போலாயினோம்.

9. [தோழி நாயகனிடம் கூறியது.]

*தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி*
*அஃதுஆண்டு அவள்செய் தது.* [1279]

தலைவியானவள் தோள் வளையல்களைப் பார்த்தாள். (மெலிவால் அவைகள் இருந்த விடத்தைவிட்டு இறங்கி விடும்.) தன்னுடைய மெல்லிய தோள்களைப் பார்த்தாள். (பிரிவுத் துன்பத்தால் அவைகள் மெலிந்துவிடும். பிறகு தன்னுடைய அடிகளைப் பார்த்தாள். (இந்த இரண்டும் நடவாமலிருக்க அவர்பின்னே செல்லுங்கள்) அந்த இடத்தில் அவள் செய்த குறிப்பு இவைகளே யாகும்.

10. [தலைமகன் பிரியாமைக் குறிப்பு.]

*பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினால்*
*காமநோய் சொல்லி இரவு.* [1280]

பெண்கள் தங்கள் காமநோயினை வாயால் சொல்லாமல் கண்ணினால் சொல்லி, அது தீர்த்தல் வேண்டி தம் பாதங்களைப் பார்த்து இரங்கிக் கேட்டு நடத்தல், தமக்கு இயல்பாகிய பெண்மைக் குணம் மேலும் ஒரு பெண்மைத் தன்மையினையுடைய தென்று அறிந்தோர் சொல்லுவார்கள்.

## 129. புணர்ச்சி விதும்பல்

1. [களித்தலும் மகிழ்தலும்.]

*உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்*
*கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு.* ]1281]

நினைத்த மாத்திரத்திலேயே களிப்பு மிகுதலும் கண்ட மாத்திரத்திலே பெருமகிழ்ச்சி அடைவதும் கள்ளுண்டார்க்கு இல்லையாகும். காமம் உடையவர்கட்கு உண்டு என்பதாகும்.

2. [ஊடுதல் செய்யக்கூடாத நேரம்.]

*தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்*
*காமம் நிறைய வரின்.* [1282]

காம இன்ப வேட்கை பனையளவினும் மிகுதியாகப் பெண்களுக்கு உண்டாகிவிடுமாகில் தினையளவும் தம்முடைய காதலரோடு பிணங்காதிருத்தல் விரும்பப்படுவதாகும். ஊடினுல் வருத்தம் மிகும் என்று நாயகன் குறிப்பாக உணர்த்தினனுகும்.

3. [கணவனைக் காணுதிருக்க முடியாத கண்கள்.]

பேணுது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணுது அமையல கண். [1283]

நம்மை மதிக்காமல் தான் (நாயகன்) வேண்டுவனவற்றையே செய்தாலும் என்னுடைய கண்கள் கணவனைப் பாராமல் அமைந்து இருக்க முடியாதவைகளாகின்றன.

4. [ஊடலும் கூடலும்.]

ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு. [1284]

தோழியே! நாயகன் இதுவரை வாராமல் இருந்த குற்றங்களைக் கருதி அவரிடம் பிணங்கிக்கொள்ள வேண்டும் என்று சென்றேன். அவரைக் கண்டவுடன் ஊடலை மறந்து என்னுடைய நெஞ்சம் அவருடன் கூடுதலிலே சென்று விட்டது.

5. [நாயகனும் எழுதுகோலும்.]

எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட இடத்து. [1285]

கண்களுக்கு மையெழுதும்போது அந்தக் கோலினுடைய தன்மையினைக் காணமுடியாத கண்களைப்போல, என்னுடைய இன்ப நாயகரது குறை பாடுகளை அவரைக் கண்டபோது காணமுடியாதவளானேன். (அவர் இல்லாத போது குறைகளைச் சொல்லிக்கொண்டிருந்தாளாம்.)

6. [காணுங்கால் காணுக்கால்.]

காணுங்கால் காணேன் தவருய காணுக்கால்
காணேன் தவறல் லவை. [1286]

கணவரைப் பார்க்கின்றபோது அவருடைய குற்றங்களானவைகளைக் காணமுடியாதவளாகின்றேன். அவரைக் காணுதபோது குற்றங்கள் அல்லாதவைகளைக் காண முடியாதவளாகின்றேன்.

7. [ஓடுகின்ற நீரில் பாய்தல்.]

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்துஎன் புலந்து. [1287]

தம்மை இழுத்துக்கொண்டு போவதை அறிந்திருந்தும் ஓடுகின்ற தண்ணீரிலே பாய்கின்றவர்களுடைய செயலினைப் போல பிணங்கிக் கொண்டிருந்தால் அந்தப் பிணக்கு செயல் படுத்த முடியாததாகிவிடும் என்று அறிந்திருந்தும் கணவனேடு பிணங்கி அடைவது யாது?

8. [கள் போன்ற கணவன் மார்பு.]

இளித்தக்க இன்ன செயினும் களித்தார்க்குக்
கள்அற்றே கள்வநின் மார்பு. [1288]

கள்வனே! உன்னுடைய மார்பு தன்னை உண்டு மகிழ்ந்தவர்களுக்கு மானத்தினை இழக்கக்கூடிய இனிமையல்லாத துன்பத்தினைச் செய்தாலும் மேலும் மேலும் விரும்பப்படுகின்ற கள் போன்றதாக இருக்கின்றது. (தோழி நாயகனைப் பார்த்துக் கூறியதாகும்.)

9. [காமத்தின் தனிச் சிறப்பு.]

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். [1289]

காம இன்பமானது மலரினையும்விட மென்மையான தாக இருக்கும். அந்தத் தன்மையினைப் புரிந்து அதன் கால மறிந்து பக்குவமாகப் பெற்றின்புறுவோர் உலகில் சிலரே யாவர்.

10. [கலங்கினாள் புல்லினாள்.]

கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப்பு உற்று. [1290]

என்னுடைய காதலி கண்களினால் மட்டும் பிணங்கிக் கொண்டு புணர்ச்சி நிகழ்கின்றபோது என்னைக் காட்டிலும் தான் விரைவு காட்டிப் பிணக்கினை மறந்து அப்போதே கூடி விட்டாள்.

## 130. நெஞ்சொடு புலத்தல்

1. [நெஞ்சைப் பார்த்து அவள் சொல்லியது.]

அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது. [1291]

என்னுடைய நெஞ்சமே! நாயகராகிய அவருடைய மனம் நம்மை நினைக்காமல் அவருக்காகவே இருந்துகொண் டிருப்பதைத் தெரிந்திருந்தும் நீயும் அவரையே நினைந்து எமக்காக இல்லாமலிருப்பது ஏனோ?

2. [அவரிடமே செல்லுகின்றாய்.]

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅர்எனச் சேறிஎன் நெஞ்சு. [1292]

நெஞ்சமே! நம்மிடம் வந்து அன்புகாட்டாத—அன்பில் லாத—நாயகரைத் தெரிந்து வைத்திருந்தும் நாம் சென்றால், கோபித்துக்கொள்ளமாட்டார் என்ற காரணங் கண்டு அவ ரிடம் செல்லுகின்றாய்; இதுவும் உன்னுடைய அறியாமை என்பதாகும்.

3. [கெட்டார்க்கு நண்பர்கள் இல்லையோ?]

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல். [1293]

நெஞ்சமே! நீ என்னிடம் இருந்துகொண்டிராமல், விருப்பப்பட்டபடியே அவரிடத்தில் (நாயகரிடத்தில்) செல்லுவதற்குக் காரணம், கெட்டுப்போனவர்கட்கு நண்பர்களாக இருப்பவர்கள் உலகில் இல்லை என்ற நினைப்புதானே?

4. [உன்னுடன் சேரமாட்டேன்.]
இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. [1294]

மனமே! நீ அவரைக் கண்டபோது இன்பம் நுகர நினைக்கவில்லை. அவருடைய தவறு கண்டு பிணக்கினை உண்டாக்கி அதனை அளவறிந்து பின்பு அனுபவிக்க நினைக்கமாட்டாய்; இனிமேல் அப்படிப்பட்டவைகளை உன்னுடன் எண்ணிப் பார்ப்பவர்கள் யாரே உளர்? (தன்னுடைய நெஞ்சத்துடன் அவள் பேசுகிறாள்.)

5. [நாயகி, தன் நெஞ்சினைப் பற்றிப் பேசியது.]

பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்துஎன் நெஞ்சு. [1295]

நாயகர் பிரிந்திருக்கும்போது அவரைப் பெறவில்லையே என்று நெஞ்சம் அஞ்சிக்கொண்டிருக்கும்; நாயகனைப் பெற்ற பிறகும் பிரிந்து சென்றுவிடுவாரோ என்று நினைத்து அஞ்சும்; ஆகையினால் என்னுடைய மனமானது எப்போதும் நீங்காத துன்பமுடையதாக இருக்கின்றது.

6. [என்னைத் தின்பது போன்றது.]

தனியே யிருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு. [1296]

என்னுடைய நெஞ்சமானது இங்கே இருந்துகொண்டிருக்கிறது. நாயகரைப் பிரிந்திருந்து தனியாக இருந்துகொண்டு அவருடைய கொடுமைகளை (பிரிவினால்) நினைக்கும் போது, அந்த நேரத்தில் என்னைத் தின்பது போல துன்பம் செய்வதாகின்றது. (தன்னுடைய நெஞ்சத்தினைப் பார்த்து நாயகி கூறியது.)

7. [நாணத்தையும் மறந்தேன்.]

நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சில் பட்டு. [1297]

தன்னை (நாயகியை) மறந்த நாயகரை மறக்கமுடியாத மாட்சி—பெருமையில்லாத என்னுடைய அறிவென்பதில்லாத மனத்துடன் கூடி, என்னுடைய உயிரினும் மேலானதான நாணத்தினையும் நான் மறந்துவிட்டேன். (நாயகி பேசினாள்.)

8. [நாயகரை ஏளனம் பேசுதல் கூடாது.]

எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. [1298]

உயிரின் மீது ஆசையுள்ள என்னுடைய நெஞ்சமானது நம்மைப் பிரிந்து துன்பமுறும்படி செய்துவிட்டுப் போன நாயகரை நாமும் ஏளனமாகப் பேசினால் பிறகு அது நமக்கே ஏளனமாக முடியும் என்று எண்ணி அவருடைய பெருமையினையும் திறத்தினையுமே நினைத்துக்கொண்டிருப்பதாகின்றது.

9. [துன்பத்தினைப் பற்றி நாயகன் சொல்லியது.]

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாம்உடைய
நெஞ்சம் துணைஅல் வழி. [1299]

ஒருவருக்குத் துன்பம் வந்தபோது தாம் உரிமையுடன் பெற்றிருக்கின்ற தமது மனம் துணையாக நின்று உதவா திருக்குமாறல் துணையாக இருப்பவர்கள் வேறு யார் உண்டு?

10. [நெஞ்சமே நல்ல துணை.]

*தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய*
*நெஞ்சம் தமர்அல் வழி.* [1300]

தாம் உரித்தாகப் பெற்றிருக்கும் மனம் ஒருவர்க்கு உறவினராக இருந்து உதவாவிடத்து அன்னியர்கள் நம்மவர்கள் அல்லாதவர்களாக இருத்தல் சொல்லவும் வேண்டுமோ?

## 131. புலவி

1. [நாயகன் வந்தபோது தோழி நாயகியிடம் கூறியது.]

*புல்லாது இராஅப் புலத்தை அவர்உறும்*
*அல்லல்நோய் காண்கம் சிறிது.* [1301]

காதலர் அடைகின்ற காமத் துன்ப நோயினை சிறிது நாம் காண்போமாக; அவரை விரைந்து போய் தழுவாமல் இருந்து பிணங்கிக் கொண்டிருப்பாயாக;

2. [புலவியின் அளவு.]

*உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது*
*மிக்கற்றால் நீள விடல்.* [1302]

பிணங்குதல் என்று சொல்லக்கூடிய புலவி புணர்ச்சிக்கு முன் நிகழ்வதாகும். அது, உணவுகளை இனிமையான சுவையாவதற்கு உப்பு எந்த அளவு வேண்டுமோ அந்த அளவு புலவி இருத்தல் வேண்டும். அந்தப் புலவியை அளவிற்கு மேலாக சிறிது மிக விடுதல் உப்பு அளவிற்கு மீறி போட்டது போலாகும்.

3. [நாயகனுடன் நாயகி புலந்து கூறியது.]

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரை புல்லா விடல். [1303]

ஆண்கள் தம்மைப் பெறாமல் பிணங்கிக்கொண்டிருந்த மகளிரை அப்பிணக்கினை நீக்கி புணராமல் விட்டுவிடுதல் முன்னமேயே துன்புற்று அழிந்த நிலையிலிருப்பவர்க்கு மேலும் மிகுந்த துன்ப நோயினை உண்டாக்கியது போன்றதாகும்.

4. [வள்ளி.]

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று. [1304]

ஊடல் செய்து பிணங்கிக்கொண்டிருக்கின்ற மகளிரை அப்பிணக்கு நீக்கி கூடாதிருப்பது முன்னமேயே தண்ணீரில்லாமல் வாடிக்கொண்டிருக்கின்ற கொடியை அடியிலே அறுத்தது போன்றதாகும். (வள்ளி—கொடி)

5. [புலவி நீக்கிக் கூடிய நாயகன் கூறியது.]

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூவன்ன கண்ணார் அகத்து. [1305]

நற்குணங்களினாலே தகுதியும் பொருத்தமும் நிறைந்த காதலர்க்கு அழகாவது என்னவென்றால், மலர் போலும் கண்களையுடைய காதலியார் நெஞ்சில் உண்டாவதாகின்ற பிணக்கின் மிகுதியல்லவா?

6. [கனியும் கருக்காயும்.]

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. [1306]

பெரிதான பிணக்கும், சிறியதான பிணக்கும் (துனியும் புலவியும்) இல்லாமலிருந்துவிட்டால் காம இன்பமானது

முதிர்ச்சி அதிகப்பட்ட பழமும் இளங்காயும் போல் இருப்ப தாகும்.

7. [ஊடலில் உண்டாகும் துன்பம்.]

ஊடலின் உண்டுஆங்குஓர் துன்பம் புணர்வது
நீடுவது அன்றுகொல் என்று. [1307]

புணர்ச்சியானது நீட்டித்திருக்குமோ அல்லது நீட்டியாது இருக்குமோ என்ற எண்ணம் உண்டாவதால் இன்பத்திற்கு இன்றியமையாததான பிணக்கிலேயும் ஒரு துன்பம் உண்டாவதாகின்றது.

8. [காதலர் அறிதல் வேண்டும்.]

நோதல் எவன்மற்று நொந்தார்என்று அஃதுஅறியும்
காதலர் இல்லா வழி. [1308]

இவர் (காதலர்) நம்மால் வேதனைப்பட்டிருக்கின்றாரென்று அந்தக் காம நோயினை அறிந்துகொள்ளுகின்ற காதலரைப் பெற்றிருக்காதபோது, ஒருவர் நொந்துகொள்ளுவதனால் உண்டாகின்ற பயன் யாது?

9. [நீரும் நிழலும்.]

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. [1309]

உயிர் வாழ்தற்கு இன்றியமையாத நீரும் நிழலில் உள்ளபோது இனிதாகும். அதுவே போல, புணர்ச்சியின்பத்திற்கு இன்றியமையாததான பிணக்கும் அன்பு நிறைந்த காதலர்களிடையேதான் இனிதாக இருக்கும்.

10. [ஊடலை உணங்க விடுதல்.]

ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. [1310]

தான் பிணங்கிக்கொண்டு வருத்தமுற்றிருக்கவும், தன்னை விட்டிருக்கும் காதலருடனே என்னுடைய மனம் கூடி இன்புறுவோம் என்று முயற்சி செய்வதற்குக் காரணம் ஆசையே யாகும்.

## 132. புலவி நுணுக்கம்

1. [நாயகனும் நாயகியும் ஓர் அமளிக்கண் இருந்தபோது நாயகி சொன்னது.]

பெண்இயலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. [1311]

பரத்தையரிடத்து நட்புகொண்டவரே! பெண் தன்மையுடையவர்கள் எல்லோரும் தங்களுடைய கண்களால் பார்த்து பொதுவாக உங்களை அனுபவித்து இன்புறுவார்கள்; ஆதலால் அவர்கள் அனுபவித்த உங்கள் மார்பினை நான் பொருந்தமாட்டேன்.

2. [தும்மல்—தலைமகள் கூறியது.]

ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து. [1312]

காதலர் தம்முடன் ஊடல் செய்துகொண்டு பேசாது இருந்தேன். (நாயகி), அப்போது காதலர் தும்மினார். அப்படித் தும்மியதற்குக் காரணம், யாம் பிணக்கு நீங்கி, அவரை 'நெடுங்காலம் வாழ்க' என்று சொல்லிப் பேசுவோம் என்பதாகக் கருதி; தும்மினால் வாழ்த்துவது மரபு.

3. [நாயகி புலந்துகொள்ளுவது.]

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. [1313]

வளைவாகவுள்ள பூமாலையைச் சூடினேனாயினும், நீங்கள் காதலித்துள்ள ஒருத்திக்குக் காட்டுவதற்காகவே இப்பூமாலையைச் சூடிக்கொண்டிருக்கிறீர் என்று கோபித்துக்கொள்ளுவாள்.

4. [காதல் சிறப்பினைக் கூறியபோதும் கோபித்தாள்.]

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று. [1314]

காதலர்களாக உள்ள யாரினும் மிகுந்த காதலை உடையேம் என்று சொன்னேன். உங்களால் விரும்பப்பட்ட பல மகளிருள்ளும் என்னைச் சிறப்பாகக் கூறுகிறீர்களோ—ஒப்பிட்டு—என்று சொல்லி ஊடிக்கொண்டாள். 'யாரினும் 'காதலம்' என்று கூறியதில் குறைகண்டு ஊடினாள்.

5. [இப்பிறவியில் பிரியேன்.]

இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள். [1315]

காதன் மிகுதியால் காதலியை நோக்கி 'இப்பிறவியிலே நின்னைப் பிரியேன்' என்று கூறினேன். அப்படியென்றால் மறுபிறவியிலே பிரிந்துவிடுவீர்களோ என்பதாகக் கருதி அழுது கண்ணிறைந்த நீரைக்கொண்டாள்.

6. [நினைத்தேன் என்றான், கோபித்தாள்.]

உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றுஎன்னைப்
புல்லாள் புலத்தக் கனள். [1316]

பிரிந்திருந்தபோது, 'உன்னையே இடைவிடாமல் நினைத்திருந்தேன்' என்று கூறினேன். (மகிழ்வாள் என்று நாயகன் நினைத்தான் ) அதற்குமாறாக, அக்காதலி 'மறந்திருந்தால் தானே நினைக்க வேண்டி வரும்' என்று கூறி—ஏன் மறந்திருந்தீர்—என்ற நினைப்பில், என்னைத் தழுவாமல், தழுவ வந்தவள்—பிணங்குதற்கு அமைந்தாள்.

7. [தும்மியது ஏன்—என்முள்.]

வழுத்தினாள் தும்மினே னாக அழித்து அழுதாள்
யார்உள்ளித் தும்மினீர் என்று. [1317]

இருவரும் கூடியிருக்கின்றபோது தும்மினேன். தும்மியதும் இயல்பான வழக்கப்படி வாழ்த்தினாள். அவ்வாறு வாழ்த்தியதைத் தானே மறுத்து, உம்மை நினைத்து வருந்துகின்ற பெண்களுள் யாரோ நினைத்ததால் தும்மினீர்கள். யாரை நினைத்து—யாரால் நினைக்கப்பட்டு தும்மினீர் என்று பிணங்கிக்கொண்டு அழுதாள்.

8. [தும்மலை அடக்கினேன்.]

தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்தீரோ என்று. [1318]

தும்மினால் குற்றங்கண்டு வருந்துகிறாள் என்று அஞ்சி, பிறகு தும்மல் வரும்போது அத்தும்மலை அடக்கினேன். உம்முடைய காதலியர் நினைப்பதை உம்மோடு சம்பந்தமில்லாத நான் அறியக்கூடாது என்று மறைத்தீர்களோ? என்று சொல்லிப் பிணங்கிக்கொண்டு அழுதாள்.

9. [வணங்கிப் பிணக்குத் தீர்த்தேன்.]

தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. [1319]

இவ்வாறு பற்பலப் பேசி பிணங்கிக்கொண்டிருக்கும் அவளைப் பிணக்குத் தீர்ப்பதற்காக வணக்கமாகப் பேசினேன். அப்போதும் கோபித்துக் கொண்டாள். ஏனெனில், பிற பெண்களிடத்திலும் இப்படித்தான் பணிந்து வணங்கி பிணக்குத் தீர்ப்பீர்களோ? என்று சொல்லியவாறு, என்பதாம்.

10. [பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தேன்.]

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று. [1320]

என்ன பேசினாலும் செய்தாலும் பிணங்கிக் கோபிக்கிறாள் என்று பேசாமல் அவளை உற்று நோக்கிக்கொண்டிருந்தேன். அப்போதும் கோபித்துக்கொண்டாள். ஏனென்றால், என்னுடைய உறுப்புக்களையெல்லாம் உற்று நோக்கி எந்தப் பெண்ணை நினைத்துக்கொண்டு அவருடைய உறுப்புக்களுடன் ஒப்பிட்டு ஒப்புமை சிந்திக்கின்றீர்? என்று கூறி பிணங்கிக் கொண்டாள்.

## 133. ஊடல் உவகை

1. [காரணமின்றி புலத்தற்குக் காரணம்.]

இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவர்அளிக்கு மாறு. [1321]

நாயகரிடம் பிழைகள் (குறைகள்) ஒன்றுமே இல்லையென்றாலும் அவர் நம்மீது பொழிகின்ற அன்பு மிகுதியான தன்மை ஊடிக்கொண்டிருப்பதை உண்டாக்குவதாக உள்ளது.

2. [புலவியின் காரணம் கூறுகின்றாள்.]

ஊடலின் தோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். [1322]

நாம் பிணங்குதல் செய்வதனாலே நம்மிடத்தில் தோன்றுகின்ற சிறிய துன்பத்தால் தலைவர் நமக்குச் செய்கின்ற நல்லன்பு வாடுகின்றதென்றாலும் பெருமை பெறுவதாகும், என்பதாம்.

3. [புத்தேள் நாடு]

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந்து அன்னார் அகத்து. [1323]

நிலத்துடன் நீரானது கலந்துகொண்டது போல் ஒற்றுமை மிகுந்து நிறைந்த காதலரிடத்தில் பிணங்கிக்

கொள்ளுவது போல, நமக்கு இன்பத்தினைத் தருவது—தருகின்ற, ஒரு தெய்வலோகம் உண்டோ? இல்லை யென்பதாம்.

4. [புலவி நீங்கும் வழி.]

*புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்*
*உள்ளம் உடைக்கும் படை.* [1324]

காதலரைத் தழுவிக்கொண்டு பிறகு விடாமல் இருப்பதற்குக் காரணமான அப்பிணக்கினுள்ளே என்னுடைய உள்ளத்தினை உடைக்கின்ற படை உளதாகின்றது.

5. [தலைமகன் தன்னுள்ளே கூறியது.]

*தவறுஇலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்*
*அகறலின் ஆங்கொன்று உடைத்து.* [1325]

ஆண்கள் தங்களிடத்தில் குற்றங்கள் இல்லாதவர்களாயிருந்தாலும், இருப்பது போல நினைத்துப் பிணங்கிக்கொண்டிருக்கும் தம் விருப்பத்திற்குரிய மகளிரது மெல்லிய தோள்களைக்கூடி இன்பமுறுத நேரத்தில், அவர்க்கு அத்தன்மையதானதோர் இன்பம் உடையதாகின்றது.

6. [உண்ணலும் புணர்தலும்.]

*உணலினும் உண்டது அறல்இனிது காமம்*
*புணர்தலின் ஊடல் இனிது.* [1326]

உணவு உண்ணுகிறபோது பெறுகின்ற இன்பத்தினை விட முன்பு உண்ணப்பட்ட உணவு சிரணித்தல்தான் இன்பம் தருவதாகும். அதுவே போல, காமத்திற்குப் புணர்தலினை விட ஊடல் என்கின்ற பிணங்கிக்கொண்டிருத்தல் இன்பம் தருவதாகும்.

7. [தோல்வியும் வெற்றியும்.]

*ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்*
*கூடலின் காணப் படும்.* [1327]

இன்பம் நுகர்வதற்குரிய இருவரில் ஊடல் என்கின்ற பிணக்கிலே தோற்றவர் வெற்றி பெற்றவராவர். அது அந்த நேரத்தில் தெரிந்துகொள்ள முடியாவிட்டாலும், பின்னே புணர்ச்சியிலே அறிந்துகொள்ளப்படும் என்பதாகும்.

8. [நுதலும் உப்பும்]

ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலின் தோன்றிய உப்பு. [1328]

இப்பெண்ணின் நெற்றியில் வெயர்வை வரும் வகையில் புணர்ச்சியின் கண்ணே உள்ளதாகிய இன்பத்தினை இன்னும் ஒரு வாய்ப்பில் இவள் பிணங்கி யாம் பெறுதல் கூடுமோ?

9. [இரவுப்பொழுது நீளுவதாகுக.]

ஊடுக மன்னோ ஒளிஇழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா. [1329]

ஒளி வீசும் அணிகலன்களைக் கொண்ட இப்பெண் எம்முடன் இன்னும் பிணங்கிக்கொண்டிருப்பாளாக; அப்பிணக்கினைத் தீர்க்கும் பொருட்டு யாம் அவளிடம் வேண்டிக் கொண்டிருக்கும் காலம் வரை இந்த இரவு விடியாமல் நீட்டித்துக்கொண்டிருப்பதாகுக.

10. [இன்பம்—இன்பம்.]

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்
கூடி முயங்கப் பெறின். [1330]

காம அனுபவம் என்பதற்கு இன்பம் எதுவென்றால் ஊடுதல் எனப்படுகின்ற பிணங்குதலாகும். அந்த ஊடுதலுக்கு இன்பமாவது எதுவென்றால் இருவரும் கூடி புணர்தல் நிகழுமானால், என்பதாம்.

[காமத்துப்பால் இருநூற்று ஐம்பது குறட்பாக்களும் நிறைவுற்றன.]

"நூல் அமைப்பு முறை" என்ற கட்டுரையில் குறித்துக் காட்டப்பட்டுள்ள எண்கள் கொண்ட குறட்பாக்கள் பின்வருமாறு :—

73. அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.

75. அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு.

117. கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

132. பரிந்துஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்துஓம்பித்
தேரினும் அஃதே துணை.

140. உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

155. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.

169. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

203. அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

232. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

238. வசைஎன்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்
எச்சம் பெறாஅ விடின்.

242. நல்ஆற்றான் நாடி அருள்ஆள்க பல்ஆற்றான்
தேரினும் அஃதே துணை.

245. அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

246. பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்ப அருள்நீங்கி
அல்லவை செய்து ஒழுகுவார்.

300. யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்துஒன்றும்
வாய்ம்மையின் நல்ல பிற.

322. பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

330. உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

361. அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்புஈனும் வித்து.

392. எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு.

399. தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

425. உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு.

426. எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.

503. அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

533. பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.

572. கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

637. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்.

662. ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள்.

738. பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து.

850. உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்.

918. ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்குஎன்ப
மாய மகளிர் முயக்கு.

941. மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

953. நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.

981. கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

991. எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
பண்புஉடைமை என்னும் வழக்கு.

992. அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல்
இவ்இரண்டும்
பண்புஉடைமை என்னும் வழக்கு.

1280. பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப
கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு.

# காமத்துப்பால்

## அதிகாரங்கள் விளக்கம்

இருபத்தைந்து அதிகாரங்களைக் கொண்ட காமத்துப் பாலில் முதல் அதிகாரம் தகையணங்குறுத்தல் என்ற பெயரில் அமைந்திருக்கிறது. அதாவது அப்பெண்ணின் அழகு தன்னை வருத்துகின்றது என்று காதலன் சொல்லுகின் ருன் என்பதாகும். காதல் என்பது பெண்ணின் அழகினைக் கொண்டுதான் தொடங்கப்படுகின்றது என்பதற்காகத்தான் முதல் அதிகாரத்தின் பெயரிலேயே 'அணங்கு' என்ற சொல் லினை அமைத்தார்.

அணங்கு என்பது அழகு நிறைந்த பெண்ணைக் குறிக் கின்றது. அணங்கு என்பது தெய்வமகள் என்பதைக் குறிப்ப தாகும். காமத்துப்பாலின் முதல் குறட்பா அணங்கு என்ற சொல்லிஞல்தான் தொடங்குகின்றது என்பதும் சிந்திக்கத் தக்கதாகும்.

அடுத்து காதலர்கள் ஒருவரையொருவர் பார்வைகளி ஞல் பார்த்து மகிழ்வதனைக் குறிப்பதாகும். இந்த அதிகாரத் திற்குக் குறிப்பறிதல் என்ற பெயர் வைக்கப்பட்டு இருக் கிறது. உள்ளத்தில் உள்ள எண்ணங்களை முகக்குறிப்புகளி ஞல் தலைமகனும் தலைமகளும் அறிந்துகொள்ளுதல் ஆகும்.

பொருட்பாலில் 'குறிப்பு அறிதல்' என்ற பெயரில் ஒரு அதிகாரம் வைக்கப்பட்டுள்ளது. திருக்குறளில் இந்த ஒரு அதிகாரத்தின் பெயர்தான் இரண்டு முறை சொல்லப்பட்டு இருக்கின்றது. ஒரு நாட்டின் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டிருக்கின்ற தலைவன் அதாவது மன்னன் சிறந்த பேரறிஞர்களைத் தனக்குத் துணையாக வைத்துக்கொள்ளு வான்.

தலைவனைப் பார்க்க வருகின்றவர்களுடைய முகக்குறிப் பினைக்கொண்டே வருகின்றவர்களின் உள்ளத்தில் எத்

தகைய எண்ணங்கள் இருக்கும் என்பதனை மன்னனுக்கு எடுத்து உரைக்க வேண்டும். வாய்விட்டு சொல்லாமலேயே மனத்தில் உள்ளதை நுட்ப அறிவினால் அறிந்து தெரிந்து கொள்ள வேண்டிய திறமையினை இந்த அதிகாரம் எடுத்துக் கூறுகிறது.

காமத்துப்பாலில் 'குறிப்பு அறிவுறுத்தல்' என்று ஒரு அதிகாரம் அமைக்கப்பட்டுள்ளது. நாயகியானவள் மனம் விட்டு சொல்லமுடியாத இன்ப எண்ணங்களை தன்னுடைய முகக் குறிப்பினால் நாயகன் உணர்ந்துகொள்ளுமாறு செய்தல் ஆகும். குறிப்பறிதல், குறிப்பு அறிவுறுத்தல் என்ற அதிகாரங்களின் வேறுபாடுகளை அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

காமத்துப்பாலில் மூன்றாவது அதிகாரம் **புணர்ச்சி மகிழ்தல்** என்பதாகும். காதலனும் காதலியும் இன்பம் நுகர்ந்து மனத்தினை மிகவும் சிறப்பாக எடுத்து உரைத்தல் ஆகும். அடுத்து கூறப்பட்டுள்ளது **நலம் புனைந்துரைத்தல்** என்பதாகும். காதலன் தன்னுடைய காதலியின் அழகையும் மற்ற சிறப்புகளையும் உயர்வாக பேசுதல் என்பதாகும். புனைந்துரைத்தல் என்பது கற்பனை உணர்வுடன் காதலின் சிறப்பினைக் கூறுகின்றான்.

இந்த அதிகாரம் **காதற் சிறப்புரைத்தல்** என்ற தலைப்பில் காணப்படுகிறது. அதாவது காதலனும் காதலியும் தம் காதல் மகிழ்வினைக் கூறுவதாகும் என்று கொள்ளப்படும்.

அடுத்த அதிகாரம் **நாணுத்துறவுரைத்தல்** என்று வைக்கப்பட்டுள்ளது. இந்த மூன்று அதிகாரங்களிலே தொடர்ந்து உரைத்தல் என்ற சொல் காணப்படுவது சிந்தனைக்கு உரியதாகும். காமம் மிகுந்தவர்களுக்கு நாணம் இல்லை என்ற உண்மைகளை இந்த அதிகாரம் குறிப்பால் உணர்த்துகின்றது. காதலியைச் சந்திக்கும் வாய்ப்பு இல்லாமல் பெற்றோர்கள் செய்துவிட்டபடியால் தங்களுடைய நாணத்தைவிட்டுப் பலர் அறிய காதலன் செய்கின்றான் என்பதாகும்.

அலரறிவுறுத்தல் என்பது காமத்துப்பால்—களவியல் பகுதியில் கடைசி அதிகாரம் ஆகும். பிறர் அறியாமல் மறைவாக நடந்துவந்த காதல் பிறர் அறிந்துகொள்ளும் நிலையை ஏற்படுத்திவிட்டது என்பதைச் சொல்வதாகும். பெற்றோர்கள் அறியாமல் இருவரும் வெளியூர் செல்வதற்கு உரிய எண்ணங்களையும் உண்டாக்கச் செய்வதாகும்.

காமத்துப்பாலில் இரண்டாம் பிரிவான இந்த கற்பிய லில் முதல் அதிகாரமாக **பிரிவாற்றுமை** வைக்கப்பட்டுள் ளது. நாயகன் பற்பல பணிகள் காரணமாக நாயகியைப் பிரிந்து செல்கின்றான். அவள் பிரிவுத் துன்பத்தினைத் தாங்கிக்கொள்ள முடியாமல் துன்பப்படுகின்றாள்.

பிரிவுத் துன்பத்தினைத் தாங்க முடியாததால் பிரிவாற் றுமை என்று வைக்கப்பட்டது. ஒரு பெண்ணானவள் தன் னுடைய கற்பின் மேம்பாட்டினை நாயகன் பிரிந்திருக்கும் பொழுதுதான் உணர்த்தமுடியும் என்ற குறிப்பினை உணர்த் துவான் வேண்டியே கற்பு இயலில் பிரிவாற்றுமை முதல் அதிகாரமாக வைக்கப்பட்டது.

அடுத்த அதிகாரம் **படர் மெலிந்திரங்கல்**. நாயகன் பிரிந்துவிட்டதினால் உடம்பு மெலிந்த வருத்தத்தினைக் குறிப்பதாகும்.

அடுத்த அதிகாரம் **கண் விதுப்பழிதல்**. விதுப்பு தன்மையினைக் குறிப்பதாகும். கண்கள் நாயகனைக் காண விரைந்து வருந்துகின்றன என்பதாகும்.

அடுத்த அதிகாரம் **பசப்புறு பருவரல்**. நாயகன் பிரிவி னல் நாயகியின் உடம்பு வேறு நிறமாக வெளுத்து பசலை பூத்துவிடுகிறது. அதனால் நாயகி வருந்துகின்றாள் என்பதை இந்த அதிகாரம் குறிக்கிறது.

அடுத்த அதிகாரம் **தனிப்படர் மிகுதி**. தனிமையாக அவள் இருப்பதால் பிரிவுத்துன்பம் அவளுக்கு வந்துவிட்டது. அந்தத் துன்பம் மிகுதியாக இருக்கிறது. அறமும் பொருளும்

நோக்கி ஆண்மகன் பிரிந்து இருப்பதால் அவனுக்கு இந்தத் துன்பம் இல்லை என்பதாகும்.

நாயகனோடு இன்புற்று வாழ்ந்த நாட்களை நினைத்து நாயகி வருந்துவதைக் கூறுகிறது **நினைத்தவர் புலம்பல்** என்ற அதிகாரம். இந்த அதிகாரம் சிறப்பாக நாயகிக்குத் தான் என்று கூறுவதும் உண்டு.

இல்லத்தில் தலைவி பற்பல கனவுகள் காண்கிறாள். அந்தக் கனவுகளோடு கண்ட நாயகனைப் பற்றியும் நிகழ்ச்சிகள் பற்றியும் கூறுவது **கனவு நிலை உரைத்தல்** என்ற அதிகாரம் ஆகும்.

மாலைநேரம் வந்த உடனே இன்ப எண்ணங்கள் எல்லாம் நாயகிக்கு வந்துவிடுகின்றன. அந்த மாலைநேரம் வந்ததைக் கண்ட உடனே நாயகி வருந்துவதைப் **பொழுது கண்டு இரங்கல்** என்ற அதிகாரம் கூறுகின்றது.

இன்ப எண்ணங்களையும் நாயகனையும் நினைத்து நினைத்து நாயகியின் உறுப்புகளின் அழகு எல்லாம் அழிந்து போவதை **உறுப்புநலன் அழிதல்** என்ற அதிகாரம் கூறுகின்றது.

துன்பம் மிகுதியால் பெண்கள் தமக்குத்தாமே நொந்து கொண்டு பேசுவார்கள். தனக்கு ஆறுதல் சொல்லுவதற்கு யாருமே இல்லாததால் நாயகி இன்னது செய்வது என்று அறியாமல் தன்னுடைய நெஞ்சத்தோடு தான் பேசுவதை **நெஞ்சொடு கிளத்தல்** என்ற அதிகாரம் விளக்கம் செய்கின்றது.

கற்பு நிறைந்த பெண்கள் தங்கள் உள்ளத்தில் உள்ள இன்ப எண்ணங்களை எப்போதும் மறைத்தே வைத்திருப்பார்கள். காம மிகுதியினால் அடக்க முடியாமல் வாய்விட்டு வெளிப்படுத்தி விடுகின்ற செய்திகளை எல்லாம் **நிறையழிதல்** என்ற அதிகாரம் விளக்கமாகக் கூறுகின்றது.

பிரிவுத் துன்பத்தினால் வாட்டமுற்று இருக்கும் நாயகனும் நாயகியும் ஒருவரை ஒருவர் காண்பதற்கு விரைந்து

கொண்டு இருக்கிறார்கள் என்பதை **அவர்வயின் விதும்பல்** என்ற அதிகாரம் கூறுகின்றது.

உள்ளத்தில் உள்ள குறிப்புகளை ஒருவருக்கொருவர் மற்றவர் உணருமாறு வெளிப்படுத்திக்கொள்வதைக் **குறிப் பறிவுறுத்தல்** என்ற அதிகாரம் சொல்லுகின்றது.

பிரிந்து இருந்த நாயகனும் நாயகியும் இன்பம் நுகரு தற்கு விரைந்து இருப்பதைப் **புணர்ச்சி விதும்பல்** என்ற அதிகாரம் கூறுகின்றது.

பிணங்கிக் கொள்ளுதல் என்பது ஊடல் ஆகும். நாயக னுடன் ஊடல் செய்ய வேண்டும் என்ற அவள் எண்ணத் தினாலும் அவள் நெஞ்சம் ஊடலுக்கு இடம் தராமல் கூடலுக்கு விரைந்து செல்லுகிறபடியால் இந்த நெஞ் சுடனே அவள் பேசுவதை **நெஞ்சொடு புலத்தல்** என்ற அதிகாரம் சொல்கிறது.

சிறு பிணக்கு என்கிற கருத்தினைப் **புலவி** என்கின்ற சொல் விளக்கம் செய்கின்றது. புலவி என்பது தலைவிக்கு இன்றியமையாததாகும். நாயகனோடு நாயகி சிறு பிணக்கு செய்வதைப் **புலவி** என்ற அதிகாரம் தெளிவாக எடுத் துரைக்கின்றது.

நாயகனிடம் பிணங்குவதற்கு எந்தக் காரணமும் இல்லை யாயினும், காதல் மனத்தால் நுணுக்கமான காரணம் ஒன்றை உள்ளதாகக் கற்பனையால் கண்டுபிடித்து அவன்மீது நாயகி பிணங்கிக்கொள்வது ஆகும். இதற்குப் **புலவி நுணுக்கம்** என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது.

காமத்துப்பாலில் கடைசியாக உள்ள அதிகாரம் **ஊடல் உவகை** என்பதாகும். அதாவது கூடலுக்கு இன்றியமை யாத ஊடல், இன்பத்திற்கு முதல் காரணமாக இருப்ப தால் நாயகனும் நாயகியும் ஊடலின் சிறப்பினை உணர்ந்து மகிழ்ந்து இருப்பதாகும்.

# காமத்துப்பால் அதிகாரங்கள்

## களவியல்

1. தகை அணங்கு உறுத்தல்.
2. குறிப்பு அறிதல்.
3. புணர்ச்சி மகிழ்தல்.
4. நலம் புனைந்து உரைத்தல்.
5. காதற் சிறப்பு உரைத்தல்.
6, நாணுத் துறவு உரைத்தல்.
7. அலர் அறிவுறுத்தல்.

## கற்பு இயல்

8. பிரிவு ஆற்றாமை.
9. படர் மெலிந்து இரங்கல்.
10. கண் விதுப்பு அழிதல்.
11. பசப்புறு பருவரல்.
12. தனிப்படர் மிகுதி.
13. நினைந்தவர் புலம்பல்.
14. கனவு நிலை உரைத்தல்.
15. பொழுது கண்டு இரங்கல்
16. உறுப்புநலன் அழிதல்.
17. நெஞ்சொடு கிளத்தல்.
18. நிறை அழிதல்.
19. அவர்வயின் விதும்பல்.
20. குறிப்பு அறிவுறுத்தல்,
21. புணர்ச்சி விதும்பல்.
22. நெஞ்சொடு புலத்தல்.
23. புலவி.
24. புலவி நுணுக்கம்.
25. ஊடல் உவகை.

## காமத்துப்பால் அதிகாரங்கள்

### களவியல்

1. தகை அணங்கு உறுத்தல்.
2. குறிப்பு அறிதல்.
3. புணர்ச்சி மகிழ்தல்.
4. நலம் புனைந்து உரைத்தல்.
5. காதற் சிறப்பு உரைத்தல்.
6. நாணுத் துறவு உரைத்தல்.
7. அலர் அறிவுறுத்தல்.

### கற்பு இயல்

8. பிரிவு ஆற்ருமை.
9. படர் மெலிந்து இரங்கல்.
10. கண் விதுப்பு அழிதல்.
11. பசப்புறு பருவரல்.
12. தனிப்படர் மிகுதி.
13. நினைந்தவர் புலம்பல்.
14. கனவு நிலை உரைத்தல்.
15. பொழுது கண்டு இரங்கல்.
16. உறுப்புநலன் அழிதல்.
17. நெஞ்சொடு கிளத்தல்.
18. நிறை அழிதல்.
19. அவர்வயின் விதும்பல்.
20. குறிப்பு அறிவுறுத்தல்.
21. புணர்ச்சி விதும்பல்.
22. நெஞ்சொடு புலத்தல்.
23. புலவி.
24. புலவி நுணுக்கம்.
25. ஊடல் உவகை.

# காதலன் - காதலி குறிப்புரைகள்

காதலனைக் குறித்துப் பேசப்படுகின்ற செய்திகளும் பிறவும் பல்வேறு நிலைகளில் காதலியின் இன்பம் தோய்ந்த உள்ளத்தினைப் புலப்படுத்திவிடுகின்றன.

1. நுண்ணியர் எம் காதலர் 1126
[காணப்படாத நுட்பமானவர்.]

2. கண்ணுள்ளார் காதலவர் 1127
[எப்போதும் என் கண்ணில் இருப்பவர்.]

3. நெஞ்சத்தார் காதலவர் 1128

4. உவந்து உறைவர் உள்ளத்துள் என்றும் 1130
[மனதில் மகிழ்ந்து எப்போதும் வசிப்பவர்.]

5. அஞ்சல் ஓம்பு என்றார் 1149
[முதன்முதல் சந்தித்தபோது, பிரியேன் அச்சத்தினை நீக்குக, என்றவர்.]

6. நல்குவர் காதலர் 1150
[எனது விருப்பப்படியே இசைவார்.]

7. நின் வல் வரவு 1151
[விரைவில் திரும்புவேன் என்பதனை.]

8. பிரிவஞ்சும் புன்கண் உடைத்தால் புணர்வு. 1152
[பிரிவார் என்னும் அச்சத்தினை உண்டாக்கிற்று.]

9. அறிவுடை யார் 1153

10. அளித்து அஞ்சல் என்றவர் 1154
[எதிர்ப்பட்ட அன்று, பிரியேன் அச்சம் கொள்ளாதே என்றவர்.]

11. பிரிவுரைக்கும் வன் கண்ணராயின் 1156

[பிரிவினை உரைக்கும் வன்மையரானார்—அன்பில்லாதவர்.]

12. துறைவன் 1157

[கடற்கரைத் தலைவன்.]

13. இனியார் 1158

[இனிமையானவர், காதலர்.

14. நோய் செய்தார்க்கு, 1162

[காமத் துன்பம் உண்டாக்கியவர்.]

15. நட்பினுள் ஆற்றுபவர் 1165

[இன்பம் செய்தற்கான நட்பின்கண்ணே துன்பத்தினை உண்டாக்கியவர்.]

16. கொடியார் 1169

[பிரிவுத் துன்பம் செய்தவர்.]

17. அவர்க் கண்ட கண் 1177

[அவரைப் பார்த்த கண்கள்.]

18. பேணாது பெட்டார் உளர் 1178

[மனதால் விரும்பாமல் சொல்மாத்திரத்தில் விரும்பியவர் இங்கே இருக்கிறார் ]

19. நயந்தவர்க்கு 1181

[நயந்து என்னிடம் கேட்டவர்.]

20. அவர் தந்தார் 1182

49. மணந்தார் 1226

[திருமணம் செய்துகொண்டவர்.]

50. பொருண் மாலையாளர் 1230

[பொருள் இயல்பே தனக்கு இயல்பாக உள்ளவர்.]

51. சேண் சென்றார் 1231

52. நயந்தவர் நல்காமை 1232

53. கொடியார் கொடுமை 1235

54. கொடியர் 1236

55. காதல் அவர் இலர் 1242

56. பைதல் நோய் செய்தார் 1243

57. அவர்க் காணல் உற்று 1244

58. செற்றார், உறாஅதவர் 1245

[வெறுத்தார், பொருந்தாதவர்.]

59. கலந்துணர்த்தும் காதலர் 1246

60. பிரிந்தவர் 1248

61. உள்ளத்தார் காதலவர் 1249

62. துன்னத் துறந்தாரை 1250

63. செற்றவர் 1256

[அகன்று போனவர்.]

64. காமத்தால் பேணியார் 1257

[விரும்பப்பட்டவர்.]

65. பன்மாயக் கள்வன் 1258

66. அவர் சென்ற நாள் 1261

67. உள்ளம் துணையாகச் சென்ருர் 1263

68. பிரிந்தார் 1264

69. கொண்கன் 1265, 1266 1283, 1285

70. கண்ணன்ன கேளிர் 1267

71. சேண் சென்ருர் 1269

72. தண்ணந்துறைவன் 1277
[குளிர்ந்த துறையினையுடையவன்.]

73. நெருநற்றுச் சென்ருர் எம்காதலர் 1278
[நேற்றுதான் பிரிந்து போயினுர்.]

74. கள்வ நின் மார்பு 1288

75. அவர் நெஞ்சு அவர்க் காதல் 1291

76. செருஅர் என 1292
[கோபிக்கமாட்டார்.]

77. அவர் மறக்கல்லா 1297

78. அவர் திறம் உள்ளும் 1298

79. அவர் உறும் அல்லல் நோய் 1301

80. நல்லவர்க்கு ஏஎர் 1305
[நாயகனுக்கு அழகாவது.]
நாயகன் தன்னுள்ளே சொல்லியது;

காதலியின் அழகுநலக் குறிப்புகளும், பிறவும் பெரிதும் சிந்தனைக்குரியனவாகும்.

17. பேதைக்கு அமிழ்தின் இயன்றன. 1106

18. அம்மா அரிவை 1107

19. சேயிழை மாட்டு 1110

20. மென்னீரள் 1111

21. தோள் மூங்கில் போன்றது
பற்கள் முத்துப் போன்றவை
மணம் இயல்பான நறுமணம்
கண்கள் வேல் போன்றவை
மையுண்ட கண்கள்
மேனி தளிர் நிறமாக இருக்கும். 1113

22. மாண் இழை 1114

23. மறு உண்டோ மாதர் முகத்து 1117

24. முகம் போல் ஒளிவிட 1118

25. மலர் அன்ன கண்ணாள் 1119

26. அடிக்கு நெருஞ்சிப் பழம் 1120

27. பணி மொழி 1121

28. வால் எயிறு 1121

29. மடந்தையொடு 1122

30. திருநுதற்கு 1123

31. ஆயிழை, 1124

32. ஒள் அமர்க் கண்ணாள் 1125

33. தொடலைக் குறுந்தொடி 1135

34. மலர் அன்ன கண்ணாள் 1142

35. முன்கை இறை 1157

36. அறை பறைகண் 1180

37. சாயலும் 1183

38. கயலுண்கண் 1212

# காமத்துப்பால்

## அணிகளின் சிறப்பும் பயனும்

செய்யுட்களில் கருத்துச் சுவையினைச் சிறப்பித்துக் காட்டுவது அணிகளாகும். அணி என்ற சொல்லுக்கே அழகு என்பது பொருளாகும். இலக்கிய உலகில் அணி இலக்கணத்திற்குத் தனிப் பெருமை உண்டு. ஆசிரியர் திருவள்ளுவனார் அருமையான இடங்களில் சிறப்பாக அணிகளை அமைத்துக் குறட்பாக்களுக்குப் பெருமை தருகின்றார்.

திருக்குறளில் முதல் குறட்பாவான 'அகர முதல எழுத்தெல்லாம்' என்பதே சிறந்த அணியினைக் கொண்டிருப்பதாகும். இது 'எடுத்துக்காட்டு உவமை அணி' என்று சொல்லப்படும். திருக்குறளின் தொடக்கமே அழகுடன் தொடங்குகிறது என்பது குறிப்பாகும்.

அணி இலக்கணத்தின் சிறப்பினைப் புலப்படுத்துகின்ற 'காமத்துப்பால்' குறட்பாக்களில் சிலவற்றை கீழே தந்துள்ளோம்:

பெருமையாகப் பேசப்படும் அணிகளில் 'உவமை அணி' என்பது போற்றற்குரியதாகும். சொல்லப்படுகின்ற உதாரணத்தினையும், (உவமையினையும்) பொருளினையும், நன்கு கூறி அவைகளுக்கு இடையே உருபு வருமாறு அமைத்தல் உவமை அணியாகும். உருபுகள்என்று இலக்கண முறையில் பல உண்டு.

உவமை உருபு என்று சொல்லப்படுபவைகளை மறைவாக வைத்து, தனித்தனியாக உவமையும் பொருளும் கூறப்படுவது 'எடுத்துக்காட்டு உவமை அணி' என்று சொல்லப்படும்.

இதுவேபோன்று தனித்தனியாக அணிகளின் விளக்கங்களைத் தெரிந்துகொள்ளுதல் வேண்டும்.

உவமை என்பதினைப் பொருளின் மேல் வைத்து கருத்தினைக் கூறுதல் 'உருவக அணி' என்று சொல்லப்படுகிறது. 'முறிமேனி முத்தம் முறுவல்' என்பது போன்ற குறட்பாக்கள் 'உருவக அணி'யாகும்.

சொல்லப்படுகின்ற கருத்துக்களில்—பொருட்களில்—ஒன்றை மட்டும் உருவகம் செய்து மற்றொன்றை உருவகம் செய்யாமல் விட்டுவிட்டால் அது 'ஏகதேச உருவகம் அணி' என்று கூறப்படும்.

சொல்லவேண்டிய பொருளை நேராகக் கூறி வைக்காமல் உவமையைச் சொல்லிப் புரிந்துகொள்ளும்படி செய்வதற்குப் 'பிறிது மொழிதல் அணி' என்று சொல்லுவார்கள்.

இவ்வாறே அணியிலக்கணத்தின் பற்பல சிறப்புக்களை எல்லாம் நன்கு தெரிந்துகொள்ளுதல் நல்லதாகும்.

ஆசிரியர் திருவள்ளுவனார் அணிகளின் அழகினைத் தம்முடைய குறட்பாக்களில் மிக அழகாக அமைத்துவைத்திருப்பதைக் கண்டு மகிழ்வோமாக!

## அணிகளின் சிறப்பும் குறட்பாக்களும்

*காதலர்களின் பொதுநோக்கு*

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள 1099

*மகளிர் காமம் கடல் போன்றது*

கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணிற் பெருந்தக்கது இல் 1137

*காமமும் ஊற்று நீரும்*

மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும் 1161

*ஊரார் அறிந்துகொள்கிறுர்கள்*

மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றுல் எம்போல்
அறைபறை கண்ணு ரகத்து 1180

*பசப்பு நிறம் உடனே வரும்*

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு 1189

*கண்கள் உணர்த்திவிடுகின்றன*

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண் 1232

*காதலிக்கும் இன்ப மழை வேண்டும்*

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றுல் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி 1192

*காவடித்தண்டும் காமமும்*

ஒருதலையான் இன்னுது காமம்காப் போல
இருதலை யானும் இனிது 1196

*படுக்கையில் கொலை*

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும் 1224

*ஆயன் குழலில் காமத்துன்பம்*

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை 1228

*கதவினைக் கணிச்சி உடைக்கிறது*

காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாள் வீழ்த்த கதவு 1251

*காமத்தினை மறைக்கமுடியாது*

மறைப்பேன்மன் காமத்தை யானே குறிப்புஇன்றித்
தும்மல்போல் தோன்றி விடும் 1253

மேலுலகத்தைவிட மேலானது

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந்து அன்னார் அகத்து 1323

கூடலின் ஊடலே இனிது

உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது 1326

தெய்வமகளும் மயிலும் அவளே

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு 1081

சேனைக்கொண்டு தாக்குகின்றாள்

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து 1082

யானை முகத்தில் போர்த்திய துணி

கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில் 1087

கள்ளினைவிட காமம் இனிது

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று 1090

நோயும் மருந்தும் அவளேஆனாள்

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து 1102

நூதனமான தீ அவளிடம் உண்டு

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள் 1104

தோள்களுக்கு இருக்கும் சிறப்பு

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள் 1105

காதல் உலகே இல்லறம்

தம்இல் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு 1107

முடிவு சொல்லமுடியாதது

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு 1110

மணியும் நூலும் மடந்தை நகையும்

மணியுள் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியுள் திகழ்வதொன்று உண்டு 1273

மலரின் மொட்டும் அவள் நகைப்பும்

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு 1274

காரிகையின் பெருஞ்சிறப்பு

கண்நிறைந்த காரிகைக் காம்பேர்தோள் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது 1272

காமத்தின் தனிச்சிறப்பு

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு. 1281

நிறைந்த காமத்தில் ஊடல் இல்லை

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின் 1282

மை தீட்டும் காதலியின் கருத்து

எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட இடத்து 1285

புனலில் பாயும் காதலியின் காமம்

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்துஎன் புலந்து 1287

பாலும் தேனும் பாவைபால் கண்டான்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர் 1121

உடம்பும் உயிரும்போல் இணைந்தார்கள்

உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு 1122

நீங்கினால் வாழ்வது இல்லை

வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கு மிடத்து 1124

கண்களையும் காதலன் இழப்பான்

கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம் 1123

தூற்றிப் பேசும் ஊரார் அறியார்

மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர் 1142

இனிமை தோன்றுகின்ற நேரம்

களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது 1145

காதல் நோய்க்கு எரு போடுகிறார்கள்

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய் 1147

நெய்யால் நெருப்பை அணைக்கமுடியாது

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

### வானத்தில் சந்திரனைப் பாம்பு பிடிக்கிறது

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று 1146

### மலர்கள் மயக்கும் நெஞ்சம்

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று 1112

### ஐந்து உவமைகளின் அழகு

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு 1113

### குவளை மலர் கவிழ்ந்தது

காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாண்இழை கண்ஒவ்வேம் என்று 1114

### விண்மீன்கள் கலங்குகின்றன

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன் 1116

### காதலியின் முகத்தில் மறு இல்லை

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து 1117

### மதியைவிட காதலி உயர்ந்தவள்

மலர்அன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி 1119

### உப்பினைப்போல் புலவி இருக்கவேண்டும்

உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல் 1302

புலவி மகளிரை அறிதல்வேண்டும்

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல் 1303

வள்ளிக்கொடியின் வேரினை அரிதல்

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று 1304

காதலியின் கண்ணழகே பெருஞ்சிறப்பு

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூவன்ன கண்ணார் அகத்து 1305

காமத்திற்கு இன்றியமையாதவைகள்

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று 1306

நிழலில் இருக்கும் நீரினைப் போன்றது

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது 1309

காமத்தீயின் தனித்தன்மை

தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ 1159

நிணம் (கொழுப்பு) போன்ற நெஞ்சத்தினள்

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல் 1260

காமவெள்ளம் அடித்துப்போகிறது

காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை 1134

*நீந்திக் கரைசேர துணையில்லை*

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல் 1164

*காமமே விதையில்லாப் பழம்*

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழ்இல் கனி 1191

*காதல் பயிரை வளர்க்கின்றாள்*

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதுஅவள்
யாப்பினுள் அட்டிய நீர் 1093

*காவடித்தண்டு போன்ற உயிர்*

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து 1163

*காதலன் பன்மாயக் கள்வன்*

பல்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை 1258

*உள்ளத்தினைப் படை உடைக்கிறது*

புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்
உள்ளம் உடைக்கும் படை 1324

*கொண்டதும் கொடுத்ததும் யாவை?*

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து 1183

*தோள்கள் அழகினை இழக்கின்றன*

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள் 1234

*கொடுமையைத் தோள்கள் வெளிப்படுத்துகின்றன*

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள் 1235

*எல்லோரும் அறிய செய்கின்றது*

நிறைஅரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும் 1138

*நிறை குணத்தினையும் மீறிச் செல்கிறது*

நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்
மறைஇறந்து மன்று படும் 1254

*காதலன் அன்புதான் முதன்மையானது*

வீழ்வாரின் இன்சொற் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல் 1198

*ஊரார் காதலனைக் குறை சொல்கிறார்கள்*

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் ஊர் 1129

*இருக்குமிடம் ஊரார்க்குத் தெரியவில்லை*

உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துஉறைவர்
ஏதிலர் என்னும்இவ் ஊர் 1130

*காதலர்கள் பேச்சு நுணுக்கமானது*

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும் 1096

*காமத்தினால் வரும் இன்பமும் துன்பமும்*

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதுஅடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது 1166

வெள்ளம்போல் நீர்வடிக்கும் கண்கள்

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண் 1170

ஊடலினை வென்றுவிட்டது கூடல்

ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு 1284

முதலில் தோற்றவர் பின்னர் வென்றார்

ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலின் காணப் படும் 1327

மறைப்பதும் இல்லை உரைப்பதும் இல்லை

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும் 1162

காலையில் துன்பம் மாலையில் இன்பம்

காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை 1225

பிரிவதற்கு முன்னர் தெரியவில்லை

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன் 1226

அரும்பு, போது, மலர்.

காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய் 1227

—★—



திருக்குறளாரின் சொற்பொழிவைக் கேட்கா தமிழர்கள் எவரும் இருக்கமாட்டார்கள். கடந் நாற்பது ஆண்டுகளாக அவர் ஆற்றிவரும் திரு குறள் தொண்டு சாதாரணமானதன்று. சேலத்தி அவர் வாழ்ந்த காலத்திலேயும், அவர் திருக்குறளு காகவே 'குறள் மலர்' என்ற வார இதழை நட தியபோதும் அவரை நான் நன்கறிவேன்.

திருக்குறளை, படிக்காத பாமரரும் புரிந் கொள்ளத்தக்க வகையில் எளிய முறையில் தக உதாரணங்களோடு, சுவை ததும்ப அவர் எடுத்து கூறும் முறை அவருக்கே உரித்தான தனிப்பாa ஆகும். அவரது சொற்பொழிவுகளை இசை தட்டுகளிலேயும், நாடாக்களிலும் பதிவு செய்து உலகில் தமிழர் வாழும் பகுதிகளிலெல்லாம் ஒ பரப்ப வேண்டும் என்பது எனது பேரவா.

திருக்குறளார், காலத்தால் அழியாத உ விளக்கத்தினை நமக்கெல்லாம் தந்திருக்கிறார்க ஒரு குறளுக்கு மற்றொரு குறள் மூலமே அத முழுப் பொருளையும் உணர்ந்து கொள்ளு வண்ணம் நமக்கு உணர்த்தியுள்ள முறை முற்றிலு புதியது.

மாண்புமிகு. க. இராசார
தொழிலாளர் நல அமைச்
தமிழ்நாடு அர